

# மனைவிக்குச் சமைக்கக்கூட முடியாத அவ்வளவு களைப்பு



— “க்ருஷென்”

**அவளுக்கு ஆரோக்கியத்தையும் பலத்தையும் திருப்பி யளிக்கும் வரையில்**

சரளா மிகவும் கவனக் குறைவுடன் களைப்பும் அடைந்தாள். அவளால் மாலை போஜனத்தைக் கூட சமைக்க முடியவில்லை. அவள் கணவன் காரியாலயத்திலிருந்து வீடு திரும்பிய போது அவளது சோம்பேறித் தனத்துக்காக அவளை கோபித்துக் கொண்டான். அன்று மாலை அவள் தோழியிடம் தன் கஷ்டத்தை எடுத்துணர்த்தியபோது அவள் தோழி “தினம் காலை உண்டிக்குமுன் ‘க்ருஷன்’ சாப்பிடு” என்று யோசனை கூறினாள்.

மூன்று வார காலத்திற்குள் சரளா ஓர் புது மனுஷியாகி விட்டாள் — மவுனமாகவும் கவலையுடனுமில்லாமல் சந்தோஷமாகவும் சுறுசுறுப்பாகவும் வீட்டுக் காரியங்களை சுலபமாகக் கவனித்துக்கொள்ள முடிந்தது. மாலை நேரம் ஆனந்தமாக அமைந்தது.

மிருதுவுடன் உத்திரவாதமான ‘க்ருஷனி’ன் காரியம் கேவலம் சுத்தப்படுத்துவதைவிட மேலான பணி. உங்களுடைய ரத்தத்தில், ரத்த வோட்டத்தில் ஏன் உடம்பின் ஒவ்வொரு நரம்புகளிலுமே ஓர் உயர்ந்த புஷ்டி மருந்தின் வேலையைச் செய்கிறது. வலுவான தன்மையின் மிருதுவான உணர்ச்சியை உங்களுக்கு அளிக்கிறது. ‘க்ருஷன்’ தன் அளவில்லாத வகையில் வாழ்க்கையின் சோர்விலிருந்து உயிரின் சுறுசுறுப்பைப் பெற ஆரோக்கியத்தை அளிக்கிறதென லக்ஷக்கணக்கான மக்கள் அறிவார்கள்.

இன்றே ‘க்ருஷன்’ வாங்குங்கள். கெமிஸ்டுகளிடமும் வியாபாரிகளிடமும் எங்கும் கிடைக்கும்.
விலை ரூ. 1-10. (மஞ்சள் பெட்டியில்)




## நீங்கள் கூட அந்த ‘க்ருஷன்’ உணர்ச்சியை அடையலாம்

DKSI. 5.

**இணையிலா சமயம்!** **சொற்ப ஸ்டாக்கே உள்ளன!** **அரிய சந்தர்ப்பம்!**

இந்த கடிகாரங்கள் பெயர்பெற்ற டைம்ஸ், ஓரிஸ், மெண்டார் கம்பெனிகளின், ஸ்விஸ் தயாரிப்பு. ஒவ்வொன்றும் மூன்று வருஷ உத்தரவாதம். திருப்தி யளிக்காவிடில் பணம் வாபஸ் செய்யப்படும். ஒரு கடிகாரம் வாங்கினால் ஒரு பாக்கெட் கடிகாரமும், இரண்டு கடிகாரங்கள் வாங்கினால் ஒரு அலாரம் கடிகாரமும் இலவசமாக அளிக்கப்படும். எல்லா இடங்களிலும் ஏஜண்டுகள் தேவை.





| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| பிளேட் க்ரோம் | 23/- | ரோல்டு கோல்டு | 25/- | 5 ஜுவல் க்ரோம் | 33/- | ரோல்டு கோல்டு | 38/- |
| 4 ஜுவல் ,, | 24/- | ,, ,, | 29/- | 7 ஜுவல் ,, | 34/- | ,, ,, | 39/- |
| 7 ஜுவல் ,, | 32/- | ,, ,, | 35/- | 15 ஜுவல் ,, | 46/- | ,, ,, | 51/- |
| 15 ஜுவல் ,, | 38/- | உயர் ரகம் | 45/- | பாக்கெட் வாட்ச் | 10/- | அலாரம் கடிகாரம் | 22/- |

**JOHNSON WATCH CO., 137, Cotton Street (K. M.) CALCUTTA 7**

## அமெரிக்கன் மாடல் ரிவால்வர்

### லைசென்ஸ் வேண்டியதில்லை




உங்கள் உயிரையும், சொத்தையும் மானத்தையும், துஷ்டர்கள், விலங்குகளின் தாக்குதல்களிலிருந்து பாதுகாத்துக் கொள்ளுங்கள்.

வீட்டிலும், பிரயாணம் செய்கையிலும் இந்த அழகிய உறுதியான ரிவால்வர் உங்களுக்குச் சிறந்த, நம்பகமான நண்பனாக விளங்கும். ஒன்றன்பின் ஒன்றாக தானே 6 தரம் சுடுவதற்கு 6 ரவைகள் பொருந்திய இது, அசல் அமெரிக்கன் பிஸ்டல்களுக்குச் சமமானது. 15 அவுன்ஸ் கனமும், 9 அங்குல நீளமும் உள்ள இது நெருப்பைக் கக்கிக் கொண்டு பயங்கர சப்தத்துடன் வெடிக்கிறது. இன்றே இதில் ஒன்றுக்கு ஆர்டர் கொடுங்கள், குறைந்த விலையுள்ள இந்த மெய்க்காப்பாளன் இன்றி ஒரு நாளும் இருக்காதீர்கள்.

| | | | |
|---|---|---|---|
| ரகம் நெ. | 222 | ரூ. | 6/8 |
| ,, | 333 | ரூ. | 7/8 |
| ,, | 444 | ரூ. | 8/8 |

மேல்கொண்டு 4 டஜன் ரவைகள் விலை ரூ. 4/8. பிஸ்டல் உறை கொண்ட தோல் பெல்ட் ஒன்றின் விலை ரூ. 5/- லூப்ரிகேடிங் ஆயில் ஒரு பாட்டில் விலை ரூ. 1/- கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதுங்கள்.

**WILSON TRADING CORPORATION**
**P. B. 247. CAWNPORE (U. P.)**

# எக்ஸிமா



## "உடனேயே நிவாரணமடைகிறது"

*என்கிறார் கெமிஸ்டு*

"கால்களில் எரிச்சலளித்து வந்த எக்ஸிமாவை உங்கள் அற்புதமான தயாரிப்புதான் உடனே நிவாரண மளித்தது என்று கூற முன் வருகிறேன். தடிப்பான தோலை மென்மையாக்கவும், ஏற்பட்ட எரிச்சலைப் போக்கவும் ஒரே ஒரு பாட்டில் வெல்டர்மா சரியாக இருந்தது. இதே சரும நோயினாலோ அல்லது இதைப்போல வேறுவித சரும நோயினாலோ அல்லல் படுகிறவர்களுக்கு வெல்டர்மாவைத்தான் சிபாரிசு செய்ய வேண்டும் என்று கூறத் தேவையில்லை." — CL.

**வைத்தியர்களும் வற்புறுத்துவது:**

எக்ஸிமா, கொப்புளங்கள், சிராய்ப்பு பருக்கள் முதலிய சகல சரும நோய்களும் வெல்டர்மாவிலுள்ள 'கிருமி நாசன சக்திகளிரண்டுக்கும், அடங்கி குணமாகி விடுகின்றன. இந்த நவீன மருந்து முற்றிலும் விநோதமானது. 'நீரில் எண்ணைச் சேர்க்கை என்னும் ஆதாரம் வைத்திய ஆராய்ச்சியிலேயே மிகவும் அபூர்வம். முதலாவதாக நோய்ப்பட்ட இடத்திலுள்ள விஷத்தை வெளியேற்ற உதவுகிறது. நோய் தொத்தி விடுமென்ற அபாயமே இல்லை. இரண்டாவதாக வெல்டர்மாவின் இருவித கிருமி நாசன சக்திகளும் (ஒவ்வொன்றும் வெவ்வேறு வித விஷக் கிருமிகளுக்குச் சத்துரு) போட்ட மாத்திரத்திலேயே வியாதி தொத்தியிருக்கும் மூலஸ்தானத்திற்கு சென்று விடும். எரிச்சல் அடங்கி விச்ராந்தி ஏற்படுகிறது. ஆனால், வெல்டர்மாவை முதல் தடவையாக உபயோகிக்கும்போது சற்று விருவிருப்பை உண்டாக்கும். வெல்டர்மாவிலுள்ள இருவித கிருமிநாசன சக்திகளும் வேலை செய்யத் தொடங்கி விட்டன என்பதற்கு இதுதான் அறிகுறி.

கிருமிகளைக் கொல்ல கார்பாலிக் களிம்பைவிட பத்து மடங்கு அதிக சக்தி வாய்ந்தது. இருந்தாலும் ஆறுதல் தரும். வெகு மோசமான சரும நோய்களுக்கெல்லாம் வெல்டர்மாவைத்தான் சரும வைத்திய நிபுணர்கள் வற்புறுத்துகிறார்கள். வைத்திய சாலைகளிலும் ஆராய்ச்சி சாலைகளிலும் பரிசீலனை செய்யப்பட்டது. தூய வெண்மையானது. கறை படாது. வழ வழப்பானது, ஆனாலும் பிசுக்கற்றது. உபயோகிக்கத் தகுந்தது. வெட்டுக்காயங்களையும் சிராய்ப்புகளையும் விரைவில் ஆற்றி விடுகிறது.

**ஜியாப்ரே மானர்ஸ் & கோ., லிமிடெட்**
**பம்பாய் — கல்கத்தா — டில்லி — மதராஸ்**




**DOUBLE-ANTISEPTIC**

# Valderma

THE Non-Greasy BALM

No. 2

# பொதுஜன ஒத்துழைப்பு மிகவும் இன்றியமையாதது

•

**நமது ரயில்வேக்கள்** — பத்து வருஷங்களுக்கு முன்பிருந்த அதே எண்ணிக்கை என்ஜின்கள் ரயில் பெட்டிகளைக் கொண்டே தற்காலம் இரு மடங்குக்கு அதிகமான பிரயாணிகளுக்கு போக்குவரத்து சாதனமளிக்கின்றன. இதனால் ஜன நெருக்கடி இருக்கிறது.

**டிக்கட்டில்லா பிரயாணிகள்** ஜனநெருக்கடியை மேலும் கேவலமாக்குகிறார்கள். அவர்கள் டிக்கட்டுள்ளவர்களின் இடத்தை ஆக்ரமித்துக் கொள்கிறார்கள்; அதனால் சமுதாயத்திற்கே மோசடி செய்கிறார்கள். நமது ரயில்வேக்கள் சமுதாய நலனுக்கே உழைக்கின்றன, மேலும் சம்பாதிக்கின்றன. டிக்கட்டில்லாதோர் சுதந்திர இந்தியாவில் சட்டத்தை மீறும் மனோபாவத்தைத் தூண்டுகிறார்கள்.

**அந்த மூட்டை, முடிச்சுகள்** சகலவிதத்திலும் வேதனையளிக்கின்றன. வண்டியில் பிரயாணிகளுடைய இடத்தை அடைத்துக் கொண்டு அனைவருக்கும் இடைஞ்சல் செய்கின்றன. ஒவ்வொருவரும் அத்தியாவசியமான மூட்டைகளை மட்டும் எடுத்துக்கொண்டு போனால் அனைவருக்கும் எவ்வளவு சௌகரியமாக இருக்கும்!

**அனாவசியமான சாமான்கள்** எல்லாம் கார்டு வண்டியில் போகும்படி "புக்" செய்யவேண்டும். மேல் நாடுகளில் இதை ஜனங்களே பழக்கமாகச் செய்து வருகிறார்கள். நமது ரயில்வேக்கள் இதை வற்புறுத்த வேண்டியது அவசியமா? சுதந்திர இந்தியாவில் ஜனங்கள் தாமாகவே ஒத்துழைக்க வேண்டாமா?

**"க்யூ" வரிசை முறையை** யாவரும் அவசியம் மேற்கொள்ள வேண்டும். இதனால் டிக்கட்டுகள் வாங்குவதில் ஏற்படும் சிரமம் குறையும். இந்த "க்யூ" வரிசை முறையை பஸ் ஸ்டாண்டுகளிலும் சினிமாக் கொட்டகைகளிலும் சகஜமாக நாம் பார்க்கலாம். ரயில்வே டிக்கட்டுகள் கொடுக்கும் ஜன்னலுக்கு வெளியிலும் இம்முறையை அனுஷ்டிப்பது சாத்தியமில்லையா?

பொதுஜனத் தொடர்பு அதிகாரி, எம். எஸ். எம். & எஸ். ஐ. ரயில்வேக்கள் — சென்னை 2.



# கல்கி பொருளடக்கம்




மலர் 8 இதழ் 45 | ஜூன் 5 | விரோதி ௵ வைகாசி 23உ






இன்று இந்தியாவில் நடந்துவரும் ராஜ்யம் என்ன ராஜ்யம் என்று கேட்டால், சுயராஜ்யம் என்றோ காங்கிரஸ் ராஜ்யம் என்றோ பலர் ஒப்புக் கொள்ளமாட்டார்கள்; மகிஷானந்து பேஹேன் ராஜ்யம் என்றே அவர்கள் சொல்வார்கள்.

தென்னைமரத்துக்கும் கதகளி நடனத்துக்கும் அழகுக்கும் அறிவுக்கும் பெயர்போனது கேரள நாடு. அந்தக் கேரள நாட்டின் முக்கிய பகுதிகளான திருவாங்கூரும் கொச்சியும் இந்திய சமஸ்தானங்களுக்குள்ளே எப்போதும் முன்னணியில் நின்று வந்திருக்கின்றன. ஆண்களிலும் சரி, பெண்களிலும் சரி, இந்த இரண்டு சமஸ்தானங்களில் கல்வி பெருகியது போல் இந்தியாவில் வேறெந்தப் பகுதியிலும் பெருகியதில்லை. திருவாங்கூர் சமஸ்தானத்திலே தான் முதல் முதலாக இந்தியா தேசத்திலேயே ஆலயங்கள் ஹரிஜனங்களுக்குத் திறந்து விடப்பட்டன.




இத்தகைய திருவாங்கூர் இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி முடிவடைந்து பூரண சுதந்திரம் ஸ்தாபிக்கப்பட்ட சமயத்தில் சுதந்திர இந்தியாவில் சேராமல் தனித்து நிற்க விரும்பியது பற்றி வருத்தப்படாதவர்கள் யாரும் இல்லை. இப்போது திருவாங்கூர் சமஸ்தானம் அந்தப் பழைய தவறுக்குப் பிராயச்சித்தம் செய்து கொண்டு விட்டது!

திருவாங்கூர் மகாராஜாவான ஸ்ரீ பத்மநாப தாஸ வஞ்சிபால பலராம வர்மா சித்திரைத் திருநாளின் பரம்பரை மகத்தான பெருமை வாய்ந்தது. அந்த வம்சத்தைச் சேர்ந்த எல்லோரும் தெய்வ பக்தியிலும் பண்பாட்டிலும் சிறந்தவர்கள்.

இந்தியாவிலுள்ள பெரிய சமஸ்தானங்களில் மூன்றாவது ஸ்தானம் வகிக்கும் திருவாங்கூரின் அதிபர் மேற்படி சமஸ்தானமும் கொச்சியும் ஐக்கியம் அடையவும், அதன் ராஜப் பிரமுகராக இருக்கவும் இசைந்ததன் மூலம் சுதந்திர இந்தியாவின் ஐக்கியப்பாட்டுக்கும் முன்னேற்றத்துக்கும் பேருதவி புரிந்துள்ளார். அதைத் தவிர, தமக்குச் சொந்தமான இருபதாயிரம் ஏகரா பண்ணை நிலங்களையும் திருவாங்கூர் மகாராஜா தியாகம் செய்து தமது குலப் பெருமையை வளர்த்துக் கொண்டிருக்கிறார்.

திருவாங்கூர்-கொச்சி ஐக்கிய விஷயமாக சர்தார் பட்டேலுடன் கலந்து முடிவுக்கு வருவதற்காகத் திருவாங்கூர் மகாராஜா சமீபத்தில் டில்லிக்குச் சென்றிருந்தபோது கவர்னர் ஜெனரலின் காரில் ஏறும் சமயத்தில் எடுத்த படத்தை இந்த இதழின் அட்டையில் காணலாம்.

திருவாங்கூர் மகாராஜாவின் களைபொருந்திய முகமும் ஆடம்பரமற்ற தோற்றமும் அவரது தியாகத்தின் சிறப்பை உலகத்துக்கு அறிவிப்பது போல் தோன்றுகிறது அல்லவா?




மலர் 8 } தமிழ்த் திருநாடு தன்னைப்பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் { இதழ் 45

# என்ன செய்தி?

## கெட்டிக்காரர் பதில்

“‘இந்தியாவில் அன்னியர் ஆதிக்கத்தின் கீழுள்ள பிரதேசங்கள் இந்தியாவுடன் ஐக்கியம் அடைந்தே தீர வேண்டும்’ என்று பண்டித ஜவாஹர்லால் அடிக்கடி கூறி வருவதைக் குறித்துப் பிரஞ்சு சர்க்காரின் அபிப்பிராயம் என்ன?”

பிரஞ்சு இந்தியாவின் புதிய ஹை கமிஷனரான ஸ்ரீ ஜீன்சாம்பானை நாலு தினங்களுக்கு முன் ஒரு பத்திரிகைப் பிரதிநிதி மேற்கண்டவாறு கேட்டார். “அந்தக் கேள்விக்குப் பதில் அளிக்க வேண்டியவர்கள் பிரஞ்சு இந்திய ஜனங்களே யன்றி பிரஞ்சு சர்க்கார் அல்ல” என்று மேற்படி பிரமுகர் விடை யளித்தார். பிரஞ்சு இந்தியப் பிரதேசங்களில் எடுக்கப் போகும் சர்வஜன வாக்கின் மூலம் அவ் விஷயத்தைப் பிரஞ்சு இந்திய ஜனங்களே முடிவு செய்ய வேண்டும் என்பதை யாரும் ஆட்சேபிக்கவில்லை. ஆனால், நேர்மையான முறையில் சர்வஜன வாக்கு எடுப்பதற்குப் பிரஞ்சு சர்க்கார் இடையூறு செய்யாமல் இருப்பார்களா? அவ் விஷயமாக அவர்கள் அந்தரங்க சுத்தியுடன் நடந்துகொள்வார்கள் என்று ஸ்ரீ சாம்பான் உறுதி கூறுகிறார். எனினும், பிரஞ்சு இந்தியப் பிரதேசங்களில் நிகழ்ந்து வரும் காரியங்கள் அவர் கூறுவதற்கு நேர் மாறாக இருக்கின்றன.

காரைக்காலில் முஸ்லிம்களின் தொகை அதிகமாதலால், அதைத் தங்களுக்குச் சாதகமாக உபயோகப் படுத்திக்கொண்டு அவர்களிடையே பிரஞ்சிந்திய அதிகாரிகள் இந்தியாவுக்கு விரோதமாகப் பிரசாரம் செய்து வருகிறார்களாம். எனினும் யார் எவ்விதப் பிரசாரம் செய்தால்தான் என்ன? தங்களுடைய எதிர்கால க்ஷேமமும் மதிப்பும் இந்தியாவுடன் ஐக்கியமாவதையே பொறுத்திருக்கிறது என்பதைப் பிரஞ்சு இந்திய மகாஜனங்கள் நன்கு உணர்வார்களாயின், மிகவும் சிக்கலாகத் தோன்றும் பிரஞ்சு இந்தியப் பிரச்னை வெகு சுலபமாகத் தீர்ந்துவிடும்!

## பரீட்சை என்னும் பாதகம்

ஒரு மாணவரிடமிருந்து பின் வரும் கடிதம் வந்திருக்கிறது:—

“நான் இந்த வருஷம் பிரஸிடென்ஸி கலாசாலையிலிருந்து பி. ஏ. (ஆனர்ஸ்) பரீக்ஷை எழுதினேன். என்னோடு மற்றும் பதினாறு மாணவ மாணவிகளும் எழுதினார்கள். இரண்டு வாரத்திற்கு முன் வந்த ரிஸல்ட் எங்கள் யாவரையும் கதிகலங்கச் செய்து விட்டது. பதினேழு பேரில் பதின்மூன்று பேர்களை ‘பெயில்’ பண்ணி விட்டார்கள். இதுவரையிலும் இந்தமாதிரி ஆனர்ஸ் வகுப்பில் நடந்ததே இல்லை. மேலும், ஆனர்ஸ் பரீக்ஷைக்கு ஒரு மாணவன் ஒரே தடவை தான் எழுதலாம். பெயிலான நாங்கள் பதின்மூன்று பேரும், மூன்று வருஷத்திற்கு முன் எப்படியிருந்தோமோ, அதாவது இண்டர்மீடியட் பாஸ் பண்ணிவிட்டு எப்படி இருந்தோமோ அதே ஸ்திதியில் இன்று இருக்கிறோம். மூன்று வருஷங்கள் நாங்கள் படித்தது வீண். பணச்செலவு வீண்.

இந்த மாணவர்கள் எல்லோரும் இண்டர் மீடியட்டில் முதல் வகுப்பில் பாஸ் செய்தவர்கள். எவ்வாறு இந்தப் பதின்மூன்று பேர்களும் திடீரென்று மூட்டாள்கள் ஆனார்கள் என்பது அதிசயமா யிருக்கிறது.”

பரீட்சை என்னும் பாதகத்தின் கொடுமைக்கு இதைக் காட்டிலும் உதாரணம் வேறு வேண்டியதில்லை. இண்டர்மீடியட் முதல் வகுப்பில் தேறியவர்கள் மேலும் மூன்று வருஷம் படித்த பிறகு ‘மூட்டாள்கள்’ ஆனது அதிசயத்திலும் அதிசயந்தான்! சென்னை யுனிவர்ஸிடியிலும் பிரஸிடென்ஸி கலாசாலையிலுந்தான் இந்தமாதிரி விந்தைகள் நடக்க முடியும். இந்தப் பதின்மூன்று ஆனர்ஸ் மாணாக்கர்களும் பரீட்சைப் படுகொலைக்கு அடியோடு பலியானவர்கள்தானா? அவர்களை மீட்க வழி ஒன்றும் இல்லையா? யுனிவர்ஸிடி கட்டிடத்தின் நெடுஞ் சுவர்களே! பதில் சொல்லுங்கள்!

# முன்னேற்றப் பாய்ச்சல்!



# அறிவுக்கு விகிதாசாரம்!

# நாட்டுக்கு ஓர் அவமானம்!

பிரித்தாளும் முறை என்பது பிரிட்டிஷ் சாம்ராஜ்ய வாதிகளின் காபிரைட் இராஜதந்திரம். அந்த இராஜ தந்திரத்தை மற்ற ஐரோப்பிய நாட்டார் பிரிட்டிஷாரைப் பார்த்துக் காபி அடித்து வேறு இடங்களில் கையாண்டிருக்கிறார்கள். ஆயினும் பிரிட்டிஷார் இந்தியாவில் வெற்றியடைந்த அளவு வேறு யாரும் அந்த முறையைக் கையாண்டு வெற்றி பெறவில்லை.

பிரித்தாளும் முறையில் ஓர் அம்சமாக இந்தியாவில் பிரிட்டிஷார் அமைத்த சட்டசபைகளுக்கும் ஸ்தல ஸ்தாபனங்களுக்கும் தனித் தொகுதி முறையை ஏற்படுத்தினார்கள். அதாவது முஸ்லிம்களுக்கும் கிறிஸ்துவர்களுக்கும் ஹிந்துக்களுக்கும் ஹரிஜனங்களுக்கும் தனித்தனி தேர்தல் தொகுதிகளை ஏற்படுத்தினார்கள். தனித் தொகுதி ஏற்படுத்தாத இடங்களில் ஸ்தானங்களை ஒதுக்கி வைத்தார்கள். மதங்களுக்கு மட்டுமின்றிச் சிற்சில இடங்களில் சாதிகளுக்கும் அவ்வாறு ஸ்தானங்கள் ஒதுக்கி வைக்கப்பட்டன.

தேர்தல் ஸ்தானங்களைச் சாதி மதவாரியாகப் பிரித்துக் கொடுத்தது போல் உத்தியோகங்களையும் சாதி மதவாரியாகப் பிரித்துக் கொடுத்தார்கள்.

இதெல்லாம் எல்லா மதத்தினரையும் சாதியினரையும் திருப்தி செய்வதற்காக என்றுதான் சொல்லப்பட்டது. ஆயினும் அவ்விதம் செய்ததின் பலனாகச் சாதிகளும் சமயங்களும் தனித் தனியே பிரிந்து நிற்கப் புதிய பலமான காரணங்கள் ஏற்பட்டன. இத்தகைய பிரிவினை அன்னிய ஆட்சி நிலை பெறுவதற்கு அனுகூலமாயிற்று என்று சொல்ல வேண்டியதில்லையல்லவா?

இத்தகைய பிரிட்டிஷ் இராஜதந்திரங்களையெல்லாம் வென்று மகாத்மா காந்தியின் அஹிம்சைத் தபோபலம் இந்தியாவுக்குச் சுதந்திரம் அளித்தது.

• • •

புதுடில்லியில் கூடி இந்தியாவின் சுதந்திர அரசியல் அமைப்பை நிர்மாணித்து வரும் மகாசபையின் நடவடிக்கைகளை நேயர்கள் தினப் பத்திரிகைகளில் படித்து வருவார்கள்.

சென்ற வருஷத்தில் தேர்தல் தொகுதிகளைப் பற்றி ஆலோசித்தபோது வகுப்புவாரித் தனித் தொகுதி முறையைக் கைக்கொள்வதில்லையென்று அரசியல் நிர்ணய சபை தீர்மானித்துவிட்டது. முஸ்லிம்களுக்கு முஸ்லிம்களும் கிறிஸ்துவர்களுக்குக் கிறிஸ்துவர்களும் ஹிந்துக்களுக்கு ஹிந்துக்களும் வோட்டு செய்து பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பதற்குத்தான் தனித் தொகுதி முறை என்று பெயர். இந்த முறையினால் சென்றுபோன காலத்தில் இந்தியா தேசம் அடைந்த தீமையை எல்லாரும் நன்கு அறிந்திருந்தபடியால் தனித் தொகுதி முறை வேண்டும் என்று சொல்ல யாருமே முன்வரவில்லை. இந்த முறை அமுலில் இருந்தால் இந்திய தேசத்திலுள்ள பல்வேறு சமூகங்கள் எப்போதும் பிரிந்து நிற்க ஏதுவாகும் என்றும் ஒற்றுமைப்பட்டு ஒன்றாய்ச் சேர ஏது இல்லாமற் போய்விடும் என்றும் அனைவரும் அறிந்திருந்தார்கள். ஆகவே தனித் தொகுதி முறைக்கு அரசியல் நிர்ணய சபையின் ஆரம்ப காலத்திலேயே சமாதி எழுப்பியாகி விட்டது.

ஆனால் சிறுபான்மைச் சமூகத்தாரின் விருப்பத்தை முன்னிட்டும் அவர்களுக்கு நம்பிக்கை ஊட்ட வேண்டியும் ஜனத் தொகை விகிதாசாரப்படி ஸ்தானங்களை ஒதுக்கி வைக்கலாம் என்று முடிவு செய்திருந்தார்கள். உதாரணமாக, சென்னைச் சட்டசபையில் இருநூறு அங்கத்தினர்கள் என்றால் முஸ்லிம்களுக்கு இருபத்துநாலு ஸ்தானங்களும் கிறிதுஸ்வர்களுக்கு ஆறு ஸ்தானங்களும் ஒதுக்கப்படும். ஆனால் இந்த முப்பது ஸ்தானங்களுக்கும் ஹிந்துக்கள் — முஸ்லிம்கள் — கிறிஸ்துவர்கள் எல்லாரும் சேர்ந்தே வோட்டுக் கொடுக்க வேண்டும். அவ்விதமே ஒதுக்கப்படாத மற்ற 170 ஸ்தானங்களுக்கும் ஹிந்துக்களும் முஸ்லிம்

களும் கிறிஸ்துவர்களும் வோட்டுக் கொடுத்தாக வேண்டும். — இம்மாதிரி முன்னால் ஏற்பாடு செய்திருந்தார்கள்.

ஆனால் அவ்விதம் முன்னால் செய்திருந்த முடிவைச் சென்ற வாரத்தில் அரசியல் நிர்ணய சபை மாற்றியிருக்கிறது. சிறுபான்மைச் சமூகங்களாகிய முஸ்லிம் கிறிஸ்துவப் பிரதிநிதிகளே வற்புறுத்தியதன் பேரில் சமூகங்களுக்கு ஸ்தானங்கள் ஒதுக்கும் திட்டம் கைவிடப்பட்டது. ஷெட்யூல்ட் சாதியார் என்னும் ஹரிஜன வகுப்பாருக்கு மட்டும் வருகிற பத்து வருஷத்துக்கு ஸ்தானங்கள் ஒதுக்கப்படும். மற்ற எந்த சாதி அல்லது சமூகத்துக்கும் ஸ்தானங்கள் ஒதுக்கப்பட மாட்டாது.

எந்தச் சாதி அல்லது சமயத்தைச் சேர்ந்தவரா யிருந்தாலும் தகுதியுள்ளவர்கள் தேர்தலுக்கு நிற்கலாம்; எல்லா சாதி சமூகங்களின் ஆதரவையும் பெற்றவர்கள் வெற்றியடைந்து சட்ட சபைக்கும் மற்ற தேர்தல் ஸ்தாபனங்களுக்கும் வரலாம். சாதியின் பெயராலோ, சமூகத்தின் பெயராலோ யாரும் தேர்தலுக்கு நிற்கவும் முடியாது; வோட்டுக் கேட்கவும் முடியாது.

இந்தப் புதிய முடிவை சர்தார் பட்டேல் அரசியல் நிர்ணய சபையில் கொண்டுவந்து நிறைவேற்றினார். சிறுபான்மைச் சமூகங்களின் பிரதிநிதிகள் அதைப் பலமாக ஆதரித்தார்கள்.

இந்த முடிவை "இந்தியாவின் தலைவிதியையே நிர்ணயிக்கும் முடிவு" என்று பண்டித ஜவாஹர்லால் நேரு கூறினார். "இந்தியாவை மகோந்நதத்துக்குக் கொண்டுபோகும் முடிவு" என்று அனைவரும் பாராட்டினார்கள்.

பிரிட்டிஷ் ஆட்சியில் முளைத்த பிரித்தாளும் முறை ஒழிந்தது என்று நாமும் மகிழ்ந்து கொண்டாடுகிறோம்.

• • •

மகத்தான பெரிய காரியம் ஒன்றில் வகுப்பு வாதம் ஒழிந்ததைப் பார்த்த பிறகு ஒரு சின்னக் காரியத்தில் குடிகொண்டிருக்கும் வகுப்புவாதத்தைக் கவனிக்கலாம்.

இந்தியாவின் சுதந்திர அரசியலில் சாதி—சமயப் பிரிவினைகளுக்கு இடமில்லை என்பது மிகப் பெரிய விஷயம். சென்னை மாகாணத்துக் கலாசாலைகளில் சாதிமத விகிதாசாரப்படி மாணக்கர்களைச் சேர்த்துக் கொள்கிறார்கள் என்பது வெகு சிறிய விஷயம்.

ஆயினும் இந்தச் சிறிய விஷயம் நமது சென்னை மாகாணத்துக்கு ஒரு தனிப்பட்ட அகௌரவத்தைக் கொடுக்கிற காரியமா யிருப்பதால் அதைப் பற்றிக் கவனிக்க வேண்டி யிருக்கிறது.

"அறிவுக்கு வளர்ச்சி விகிதாசாரம் ஏற்படுத்துகிற சென்னை மாகாணம் இருளடைந்த மாகாணந்தான்!" என்று மற்ற மாகாணத்தவர்கள் நம்மைப் பார்த்துப் பரிகசிப்பதற்கு வகுப்புவாரி 'அட்மிஷன்' விஷயம் ஏதுவாகிறது.

ஸ்ரீ ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் அவர்கள் தம்முடைய ஆட்சிக் காலத்தில் பூரண மதுவிலக்கு முதலிய சிறந்த திட்டங்களைக் காரியத்தில் கொண்டு வந்து நிறைவேற்றினார்.

மாஜி கல்வி மந்திரி ஸ்ரீ அவிநாசிலிங்கம் செட்டியார் கல்வித் துறையில் பல அரிய சீர்திருத்தங்களைச் செய்தார். பல காலமாகப் பலரும் செய்ய வேண்டும் என்று சொல்லி வந்த சீர்திருத்தங்களை இந்தச் சென்னை மாகாணத்தில் முதன் முதலாகக் கொண்டு வந்து நிறைவேற்றினார்.

இதனாலெல்லாம் ஓமந்தூர் மந்திரி சபைக்கு அகில இந்தியாவிலும் மிக நல்ல பெயரும் புகழும் நியாயமாக ஏற்பட்டிருக்க வேண்டும். அப்படி ஏற்படாமற் போனதற்குக் காரணம் இந்தச் சின்ன வகுப்புவாரி அட்மிஷன் விஷயம் என்பதை வருத்தத்துடன் நாம் குறிப்பிட வேண்டியதா யிருக்கிறது.

ஓரளவு எல்லாச் சர்க்கார் கலாசாலைகளிலும், முக்கியமாக என்ஜினியரிங் மெடிகல் கலாசாலைகளிலும், சாதி மத விகிதாசாரப்படி பிள்ளைகளைச் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்ற நியதியை அமுல் நடத்தியது நமது மாஜி கல்வி மந்திரி ஸ்ரீ அவிநாசிலிங்கத்துக்கும் ஓமந்தூர் ரெட்டியாரின் மந்திரி சபைக்குமே அகில இந்தியாவிலும் அபகீர்த்தியை விளைவித்தது.

"இவர்கள் உண்மையில் திராவிடக் கழகத்தைச் சேர்ந்த ஆசாமிகள்; காங்கிரஸ் பெயரால் காரியம் நடத்துகிறார்கள்" என்று ஓமந்தூரின் எதிரிகள் பிரசாரம் செய்ததை உலகம் நம்புவதற்கு ஏதுவாயிற்று!

ஓமந்தூரைப் பற்றியும் மாஜி கல்வி மந்திரியைப் பற்றியும் அவ்விதம் கூறுவது பெரும் அநியாயம் என்பது நம்முடைய கருத்து. ஆயினும் அவர்களுடைய காரியத்தின் பலனாக இப்படி ஒரு நிலைமை ஏற்படும் என்று திட்டமாக எச்சரித்திருந்தோம்.

மேற்படி விகிதாசார 'அட்மிஷன்' முறையினால் பிராமணரல்லாதாருக்கு நியாயம் செய்வதாக மாஜி கல்வி

மந்திரி நம்பினார். ஆனால் பிராமணரல்லாதாருக்கு அவர் செய்த நன்மை மிகவும் சொற்பம். (அதிகப்படியாக நூறு மாணாக்கர்கள் என்ஜினீயரிங் படித்து விடுவதால் நாலரைக் கோடி பிராமணரல்லாதார் பிரமாத நன்மை அடைந்துவிட முடியாது.) ஆனால் அந்தக் காரியத்தினால் அகில இந்தியாவிலும் சென்னை மாகாணம் அடைந்த அகௌரவம் மிக அதிகம்.

சாதிப் பிரிவினையை வற்புறுத்தி சாதித் துவேஷத்தைப் பெருக்காமல் வேறு நாகரிகமான முறையில் பிராமணரல்லாத இளைஞரின் நலத்தைப் பாதுகாத்துக் கொள்ளலாம் என்று நாம் எடுத்துக் காட்டியிருந்தோம்.

வைஸ் சான்ஸலர் டாக்டர் லக்ஷ்மணசாமி முதலியார், பிரதம நீதிபதி ராஜமன்னார், மந்திரி கனம் பக்தவத்ஸலம் இவர்களை ஒரு கமிட்டியாக நியமித்து மாணவர்களை எடுக்கச் சொன்னால், இவர்கள் பிராமணரல்லாதாருக்கு அநீதி செய்து விட மாட்டார்கள். பரீட்சை மார்க்குகளை மட்டும் வைத்துக் கொண்டு தகுதியை நிர்ணயிக்க வேண்டிய அவசியமுமில்லை. சாதிக்கு இவ்வளவு ஸ்தானம் என்று நிர்ணயிக்காமல் எல்லா ஸ்தானங்களையும் பிராமணரல்லாதாருக்கே கொடுத்து விட்டாலும் பாதகமில்லை. அந்த ஏற்பாட்டில் இப்போதுள்ளது போன்ற சாதிப் பிரிவினை விஷம் இராது என்றும் துவேஷம் பரவாது என்றும் எடுத்துக் காட்டியிருந்தோம். அது ஒன்றும் பயன்படவில்லை.

இந்த 'அட்மிஷன்' விஷயத்தினாலேதான் ஸ்ரீ அவிநாசிலிங்கம் செட்டியாருக்குக் கல்வி மந்திரி உத்தியோகம் போயிற்று என்று நாம் சொல்லவில்லை. ஆனால் அவர் மற்றத் துறைகளில் சாதித்த மகத்தான காரியங்களுக்கு உரிய புகழ் அவருக்கு அகில இந்தியாவில் ஏற்படாமற் போனதற்கு இதுவே காரணம் என்பதில் சந்தேகமில்லை.

* * *

இப்போது புதிய பிரதம மந்திரி கனம் குமாரசாமி ராஜா வந்திருக்கிறார். கல்வி இலாகா இன்னொரு பழைய மந்திரியிடம் போயிருக்கிறது.

மாணாக்கர்கள் 'அட்மிஷ'னுக்கு விண்ணப்பம் போடவேண்டிய காலமும் நெருங்கி வந்திருக்கிறது.

புதிய பிரதம மந்திரி கனம் குமாரசாமி ராஜாவும் புதிய கல்வி மந்திரியும் 'அட்மிஷன்' விஷயத்தில் என்ன முறையைக் கடைப் பிடிக்கப் போகிறார்கள் என்று இன்னும் தெரியவில்லை.

மாஜி கல்வி மந்திரி அவசரமாக வகுத்த சீர்திருத்தத் திட்டங்கள் சிலவற்றை இந்த வருஷத்தில் மாற்றத் தீர்மானித்திருக்கிறார்கள். ஆனால் 'அட்மிஷன்' விஷயத்தில் மட்டும் பழைய சாதிப் பிரிவினை முறையையே கையாளப் போகிறார்களா? அறிவுக்கு விகிதாசாரம் வைக்கும் அபகீர்த்தியை நிலைநாட்டிக்கொள்ளப் போகிறார்களா?

* * *

இந்த முக்கியமான பிரச்னை சம்பந்தமாக இரண்டு விஷயங்களை நாம் தெளிவுபடுத்திவிட விரும்புகிறோம்.

பிராமணர்களுக்குப் பரிந்து, பிராமணர்களுடைய நன்மையை முன்னிட்டு, சாதி விகிதாசார அட்மிஷன் முறையை மாற்றவேண்டும் என்று நாம் சொல்லவில்லை. நாட்டின் பொது நன்மையையும் மாகாணத்தின் நற்பெயரையும் முன்னிட்டே சொல்லுகிறோம்.

சாதி வாரி 'அட்மிஷன்' முறையினால் பிராமணர்களுக்கு ஏதோ பெரும் நஷ்டம் நேர்ந்துவிடுவதாகச் சிலர் ஓலமிடுவதையும் நாம் ஒப்பவில்லை. இப்படிச் சொல்கிறவர்கள் உண்மை நிலையை அறியாமல் குறுகிய நோக்கத்துடன் சொல்கிறார்கள்.

ஓர் உதாரணம்: சென்ற வருஷத்தில் என்ஜினீயரிங் கலாசாலையில் அட்மிஷனுக்காக மொத்தம் 1320 பிராமண மாணாக்கர்கள் விண்ணப்பம் போட்டார்கள். இவர்களில் 40 பேருக்கு அட்மிஷன் கிடைத்தது.

மொத்தம் எடுத்துக்கொள்ளப்பட்டவர்களின் தொகை இருநூற்றுநாற்பது.

மார்க்குப் பிரகாரம் 'அட்மிஷன்' என்று வைத்து மேலும் 60 பிராமணப் பிள்ளைகள் இடம் பெறுகிறார்கள் என்று வைத்துக் கொள்ளலாம்.

அப்படியும் விண்ணப்பம் போட்ட பிராமண மாணாக்கர்களில் 1220 பேர் வேறு துறைக்குப் போயாக வேண்டும்.

1220 பேருக்கு ஏற்படும் கதி இன்னும் 60 பேருக்கு ஏற்படுவதினால் பிராமண சமூகம் அழிந்து போய்விடாது. எந்தவித விபரீதமும் ஏற்பட்டுவிடாது.

உண்மையைச் சொல்லப் போனால், சென்ற இருபது ஆண்டுகளில் கலாசாலைகளிலும் உத்தியோகங்களிலும் ஏற்பட்ட தடைகளின் காரணமாகப் பிராமண சமூகம் மகத்தான நன்மை அடைந்திருக்கிறது.

பிராமண சமூகத்தினரில் பலர் ஏட்டுக் கல்விக்குப் பதிலாக வியாபாரம், தொழில் முதலிய துறைகளில் இறங்கி மகத்தான வெற்றி அடைந்திருக்கிறார்கள்.

சர்க்கார் உத்தியோகங்களில் மாதம் நூறு ரூபாய் அல்லது இருநூறு ரூபாய் சம்பளத்திலேயே வாழ்நாளைக் கழித்திருக்கக் கூடிய பிராமணர்கள் பலர் வர்த்தகத் துறையில் இறங்கி லட்சாதிபதிகள் ஆகியிருக்கிறார்கள்.

சில நூறு பிராமண மாணவர்கள் என்ஜினியரிங் கலாசாலையில் சேராத காரணத்தினால் பிராமண சமூகத்துக்குப் பெருங் கேடு வந்துவிடாது.

அப்படிக் கேடு வருவதாயிருந்தாலும் சாதியின் பெயரால் எந்தவித உரிமையையும் கோருவது அதைவிடப் பெருந் தீங்கு பயக்கக் கூடியது என்று நாம் கருதுகிறோம்.

* * *

நாம் தெளிவு படுத்த விரும்பும் இரண்டாவது விஷயம் இது.

மாஜி கல்வி மந்திரி சட்டசபையில் கேள்விக்குப் பதில் சொன்னபோது, "தேசத்தில் சாதிப் பிரிவினை இருந்து வருகிறதே! அதை இல்லையென்று எப்படிச் சொல்ல முடியும்? கலாசாலை அட்மிஷன் விஷயத்தில் மட்டும் சாதி வேண்டாம் என்று கேட்பது என்ன நியாயம்?" என்று குறிப்பிட்டார்.

தேசத்தில் சாதிப் பிரிவினையும் சாதி உணர்ச்சியும் இன்னும் இருப்பது துரதிர்ஷ்டவசமாக உண்மைதான்!

முப்பது வருஷத்துக்கு முன்னாலிருந்ததைக் காட்டிலும் இப்போது சாதி உணர்ச்சி எவ்வளவோ குறைந்துதானிருக்கிறது. எனினும் சாதி உணர்ச்சி அடியோடு போய்விடவில்லை.

ஆனால் தேசத்தில் சாதி உணர்ச்சி இன்னும் இருக்கிற காரணத்தினால் அதைக் காங்கிரஸ் சர்க்கார் அங்கீகரிக்கலாமா என்பதுதான் கேள்வி.

தேசத்தில் தீண்டாமை உணர்ச்சி இன்னும் சிலரிடம் இருக்கத்தான் இருக்கிறது. அதற்காகக் கோயில்களிலும் குளங்களிலும் மற்ற பொது ஸ்தலங்களிலும் தீண்டாமையைப் பாதுகாக்கக் காங்கிரஸ் சர்க்கார் ஏற்பாடு செய்வது நியாயமாகுமா?

யாரும் பார்க்காமல் தனியாகச் சாப்பிட விரும்பும் வைதிக ஆசாரசீலர்கள் சிலர் இன்னமும் இந்திய நாட்டில் இருக்கத்தான் இருக்கிறார்கள்.

அதற்காகப் பொது ஹோட்டல்களில் "பிராமணர்களுக்குத் தனி இடம்" என்று போடுவதைச் சர்க்கார் இனி அங்கீகரிக்க முடியுமா?

பழமையான வழக்கங்கள் காரணமாகவும் குருட்டு நம்பிக்கை காரணமாகவும் நம்முடைய சமூகத்தில் இன்னும் சில தீமைகள் இருக்கத்தான் செய்கின்றன. ஆனால் அந்தத் தீமைகளுக்குச் சர்க்கார் ஆதரவு ஏற்படக் கூடாது. முக்கியமாகக் காங்கிரஸ் பெயரால் ஆட்சி நடத்தும் மந்திரிகள் ஆதரவு கொடுக்கவுங் கூடாது; அங்கீகரிக்கவுங் கூடாது.

சாதிப் பிரிவினையை ஒப்புக் கொள்ளாமல் காங்கிரஸ் சர்க்கார் காரியங்களை நடத்திக்கொண்டு சென்றால் கூடிய சீக்கிரத்தில் சாதி வேற்றுமை என்னும் தீமை மறையும் என்பது நிச்சயம்.

சாதிப் பிரிவினைக்குச் சர்க்காரே அங்கீகாரம் கொடுத்து ஒப்பம் வைத்தால் சாதி உணர்ச்சியும் வேற்றுமையும் வளர்ந்து கொண்டேதான் இருக்கும்.

முக்கியமாக, பள்ளிக்கூடங்கள்—கலாசாலைகள் விஷயத்தில் காங்கிரஸ் சர்க்கார் எந்தவிதத்திலும் சாதிப் பிரிவினையை ஒப்புக்கொள்ளவே கூடாது. ஒப்புக் கொள்ளுதல் இளம் மாணவர்களின் உள்ளத்தில் சாதித் துவேஷம் என்னும் விஷத்தை ஏற்றுவதாகும்.

ஹிந்துக்களும் முஸ்லிம்களும் கிறிஸ்துவர்களும் தனித்தனி மதங்களை அனுசரிக்கிறார்களே என்பதற்காக அரசியல் நிர்ணய சபை தனித் தொகுதிகளை ஒப்புக் கொள்ளவில்லை; ஸ்தானங்களை ஒதுக்கும் முறையைக்கூட ஒப்புக் கொள்ளவில்லை. சாதி சமூகப் பிரிவினைகளை அடியோடு தொலைத்துத் தலை முழுகி விட்டார்கள்.

அரசியலில் ஒழித்துவிட்ட தீமையைக் கலாசாலை 'அட்மிஷன்' விஷயத்தில் வைத்துக் கொள்வது முற்றும் அசம்பாவிதமாகும்.

சென்னை மந்திரிகள் தங்களுக்குப் பரிபூரண நம்பிக்கையுள்ள மனிதர்களாகப் பொறுக்கி எடுத்துக் கமிட்டி நியமிக்கட்டும். அந்தக் கமிட்டியாரின் உசிதம்போல் எவ்வித வரையறையும் விகிதாசாரமும் இன்றிக் கலாசாலைகளில் 'அட்மிஷன்' கொடுக்கட்டும்.

சாதி, மத விகிதாசாரம் கலாசாலை 'அட்மிஷன்' விஷயத்தில் வேண்டாம். அந்த விகிதாசாரம் இருக்கும் வரையில் சென்னை மாகாணத்துக்கு ஏற்பட்டிருக்கும் அபகீர்த்தி போகாது.

# தி மதராஸ் இன்ஸ்டிட்யூட் ஆப் டெக்னலஜி, மதராஸ்



இந்த இன்ஸ்டிட்யூட்டின் நிதிக்கு **ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி** தன் உபகாரமாக கும்பகோணத்தில் நடத்துவதாகத் தீர்மானித்திருந்த உதவிக் கச்சேரி, சில தவிர்க்க முடியாத காரணங்களால் ஒத்திவைக்க வேண்டியதாகி விட்டதை மேற்படி இன்ஸ்டிட்யூட்டார் வருத்தத்துடன் அறிவிக்கின்றனர்.

மேற்படி கச்சேரி 1949ஆு செப்டம்பர் மாதத்தில் நடைபெறும். கச்சேரி தேதி அது சமயம் அக்ராசனம் வகிக்க இசைந்துள்ள **சென்னை பிரதம மந்திரியைக்** கலந்து கொண்டு அறிவிக்கப்படும்.

---

# கலாக்ஷேத்திரம்

**அடையாறு** **மதராஸ் - 20**

பிரஸிடென்ட் - டைரெக்டர் : **ஸ்ரீமதி ருக்மணி தேவி**

**29 - 6 - 49 புதன்கிழமை திறக்கப்படுகிறது**
**25 - 6 - 49 சனிக்கிழமை முதல் பதிவுகள் செய்யப்படும்**

கீழ்க்கண்ட பாட திட்டங்களும் போதிக்கப்படும் :

- **சங்கீத சிரோன்மணி வகுப்பு :** *(சென்னை சர்வகலாசாலை அங்கீகாரம் பெற்றது)*
- **டிப்ளோமா வகுப்புகள் :**
  - சங்கீதம் : *(வாய்ப்பாட்டு, வீணை, பிடில், கோட்டு வாத்தியம் & மிருதங்கம்)*
  - நாட்டியம். *(பரதநாட்டியம், கதக்களி, நாடகக் கலை)*
  - சித்திரமும் கைத்தொழிலும் : *(சகலவிதமான வர்ணச் சித்திரக் கலைகளும், மண் சிற்பக் கலை, மரவேலை, வார்னிஷ் பூச்சு வேலை, மேஜை ஜோடனை முதலியன)*

ஹாஸ்டல் வசதியும் நடைமுறைக் கல்வியும் பெஸண்ட் தியோஸாபிகல் ஹைஸ்கூலுடன் இணைக்கப் பட்டிருக்கிறது. நகரத்தில் வசிப்பவர்களின் சௌகரியத்திற்காக ஒரு பிராஞ்சு (88, கச்சேரி ரோடு) மைலாப்பூரில் திறக்கப்பட்டிருக்கிறது.

பூரா விவரங்களும் அடங்கிய அட்டவணைக்கு 12 அணா ஸ்டாம்புடன் எழுதுங்கள் :

●

மானேஜர் : **கலாக்ஷேத்திரம், அடையாறு, மதராஸ் - 20**
(போன் : 84326)



# ஆடல் பாடல்



"கர்நாடகம்"

## "என் கடவுள்!"

சிலர் கடவுளை அநாவசியமாக விரோதிக்கிறார்கள். அவர்களை கடவுள் இல்லை என்று நிரூபிப்பதற்கும் அரும்பாடு படுகிறார்கள். இல்லாத ஒன்றினிடத்தில் எதற்காக இவ்வளவு விரோதம் அவர்கள் பாராட்டுகிறார்கள் என்பது எனக்கு விளங்குவதில்லை.

வேறு சிலர் கடவுளுக்குத் தங்களை வக்கீலாக நியமித்துக் கொள்கிறார்கள். கடவுள் இல்லையென்று சொல்கிறவர்கள் மீது இவர்களுக்கு அசாத்திய கோபம் வந்துவிடுகிறது. அல்லது கடவுளைப் பற்றிப் புகார் சொன்னாலும் இவர்களுக்கு அளவில்லாத ஆத்திரம் பொங்கி விடுகிறது. சர்வ வல்லமையுள்ள கடவுள் தம்மைத் தாமே கவனித்துக் கொள்ள மாட்டாரா, அற்ப மனிதர்களாகிய நாம்தானா கடவுளையும் அவருடைய நல்ல பெயரையும் காப்பாற்ற வேண்டும் என்று இவர்கள் யோசித்துப் பார்ப்பதில்லை.

மூன்று மாதத்துக்கு முன்பு இத்தகைய சிநேகிதர் ஒருவரை நான் சந்திக்க நேர்ந்தது. கடவுளிடம் அப்போதுதான் 'பீஸ்' வாங்கிக் கொண்டு வந்த வக்கீல்மாதிரி அவர் ஆத்திரத்துடன் பேசினார்.

"கேட்டீர்களா, இந்த அநியாயத்தை!" என்று நண்பர் ஆரம்பித்தார்.

"எத்தனையோ அநியாயங்களைப் பற்றிக் கேட்டிருக்கிறேன். நீங்கள் எதைப் பற்றிச் சொல்கிறீர்கள்?". என்றேன்.

"நல்ல தம்பி என்கிற கெட்ட தம்பியின் அநியாயத்தைப் பற்றித்தான் சொல்கிறேன். அந்தப் படம் முழுதும் ஒரே நாஸ்திகப் பிரசாரமாம். கடவுள் இல்லை என்றும் கோயிலுக்குப் போகக்கூடாது என்றும் பிரசாரம் செய்திருக்கிறதாம். சாதித் துவேஷத்தைக் கிளப்பிவிடுகிறதாம். படம் முழுவதும் ஒரே திராவிடக் கழகமும் கருப்புச் சட்டையுமாயிருக்கிறதாம்!" என்று அந்த நண்பர் வெளுத்து வாங்கினார்.

"எல்லாவற்றுக்கும் ஒரு 'ஆம்' விகுதியைச் சேர்த்துக் கொள்கிறீர்களே? நீங்கள் அந்தப் படத்தைப் பார்க்கவில்லையா?" என்று அவரைக் கேட்டேன்.

"பார்ப்பானேன், அந்த இலட்சணத்தை! மூன்றரை மணி மாட்டினி ஷோவுக்கு மத்தியானம் ஒரு மணியிலிருந்து டிக்கெட் வாங்கக் 'க்யூ' நிற்கிறார்கள்! இதில் யார் இடித்துப் பிடித்துக்கொண்டுபோய் டிக்கெட் வாங்குகிறது?" என்றார் நண்பர்.

"ஒரு காரியத்தை நேரில் பார்க்காமல் இவ்வளவு தீவிரமான அபிப்பிராயம் சொல்லக் கூடாது. நான் படத்தைப் பார்த்து விட்டு வந்து பிற்பாடு என் அபிப்பிராயத்தைச் சொல்கிறேன்!" என்றேன்.

"நீங்கள் எதற்காக அதைப் போய்ப் பார்க்கவேண்டும்? என். எஸ். கிருஷ்ணன் படம் எடுத்தால் அது எப்படி இருக்கும் என்று பார்க்கவேண்டுமா, என்ன? சென்னை சர்க்கார் அந்தப் படத்தை Ban (தடை) செய்துவிடப் போவதாகத் தெரிகிறது."

"அப்படி ஒன்றும் இருக்க நியாயமில்லை. புதிய சென்ஸார் போர்டார் கொஞ்சம் கண்டிப்பாகவே இருக்கிறார்கள். ஏதாவது ஆட்சேபகரமாயிருந்தால் முன்னாலேயே 'கட்' பண்ணச் சொல்லியிருப்பார்கள்."

"அதெல்லாம் இல்லை. நான் நிச்சயமாகக் கேள்விப்பட்டேன், படத்தைச் சர்க்கார் தடை செய்யப் போகிறார்கள் என்று."

"உங்கள் செய்திக்காக வந்தனம். சர்க்கார் தடை செய்வதற்குள்ளே சீக்கிரமாகவே படத்தைப் பார்த்து விடுகிறேன்."

"திவ்யமாய்ப் பாருங்கள். உங்களையும் என்னையும் போன்றவர்கள் இப்படிப்பட்ட படத்தைப் பார்த்தால் ஒன்றும் முழுகிப் போய்விடாது. நாஸ்திகப் பிரசாரம் நம்மைப் பாதிக்கப் போவதில்லை. ஆனால் சாதாரண பாமர ஜனங்கள் அநியாயமாய்க் கெட்டுப்

போவார்களே என்பதைப் பற்றித்தான் எனக்குக் கவலையா யிருக்கிறது!"

இப்படியாக எங்கள் சம்பாஷணை முடிவடைந்தது. ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணன் திராவிடக் கழகத்தைச் சேர்ந்தவர் என்றும் கடவுள் நம்பிக்கை இல்லாத நாஸ்திகர் என்றும் அந்த நண்பரின் மனதில் உறுதியான எண்ணம் குடி கொண்டிருந்தது. அதனால் அவருக்கு "நல்ல தம்பி"யின் பேரில் அவ்வளவு கோபம் வந்திருந்தது.

ஆனால் "நல்ல தம்பி" என்கிற படத்தைப் பார்க்க வேண்டும் என்னும் விருப்பம் எனக்கு வேறொரு காரணத்தினால் முன்னமேயே ஏற்பட்டிருந்தது. அந்தப் படத்திலிருந்து "இந்திர சபை நாடகம்" என்னும் பகுதியை ஒரு நாள் ரேடியோவில் நான் கேட்க நேர்ந்தது. நாடகம் எனக்கு ரொம்பப் பிடித்திருந்தது. மது விலக்கு இயக்கத்துக்குச் சரியான பிரசாரம் என்றும் தோன்றியது. ஆகையால் அந்தப் பகுதியைக் கொண்ட "நல்ல தம்பி" படத்தையும் பார்க்க வேண்டும் என்று விரும்பினேன்.

ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணனுடைய அரசியல் — சமூகக் கோட்பாடுகளைப் பற்றி நான் கொஞ்சமும் கவலைப்பட வில்லை.

'எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும்
அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு'

என்று தமிழ் மறை கூறுகிற தல்லவா?

• • •

நல்ல தம்பி படத்தில் ஆரம்பத்திலேயே "இந்திர சபா" நாடகம் வருகிறது. வெகு சாமர்த்தியமாகவும் சாதுர்யமாகவும் இந்த நாடகம் புனையப்பட்டிருக்கிறது. பழைய தெருக் கூத்துப் பாணியில் தற்காலத்துக்கு உகந்த கருத்துக்களைச் சித்திரித்திருக்கிறது.

"நம்முடைய இந்திர லோகத்திலேயே நம்மால் மதுவை ஒழிக்க முடியவில்லையே! அப்படியிருக்கத் தமிழ்நாட்டில் மதுவை அடியோடு ஒழித்து விட்டார்களா! பலா! பலா!" என்று நாடகமேடை கிடு கிடுக்கும் படி எழும்பிக் குதிக்கிறான் இந்திரன். புராணங்களில் இந்திரனுடைய பொறாமைக் குணத்தை வெகு நன்றாக எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். பூலோகத்திலே யாராவது விசேஷமாகத் தவம் செய்கிறார்கள் என்றும், தானதர்மங்களைச் செய்கிறார்கள் என்றும் தெரிந்தால், தேவேந்திரனுக்குப் பொறுக்கவே பொறுக்காது. தன்னுடைய பதவிக்கு ஆபத்து வந்துவிடப் போகிறதே என்ற பயமும் சேர்ந்து விடும். உடனே அவர்களுடைய தவத்தைக் கெடுக்கவும் நல்ல காரியங்களுக்கு முட்டுக் கட்டை போடவும் ஆட்களைப் பிடித்து அனுப்பி விடுவான்!

இந்தக் காலத்தில் தேச பக்தர்களும் தியாகிகளும் அடங்கிய காங்கிரஸ் ஸ்தாபனத்தைப் பாருங்கள். காங்கிரஸுக்குள்ளேயே, "அவர் அதிகமாகத் தியாகம் செய்து நல்ல பெயர் வாங்கிவிடுகிறாரே! இவர் அதிகமான தொண்டு செய்து செல்வாக்குப் பெற்று விடுகிறாரே?" என்னும் சிறு பொறாமைகள் ஏற்படுவதை நாம் பார்க்கவில்லையா? இந்தப் பொறாமைகள் காரணமாக ஏற்படும் சண்டை சச்சரவுகள் சில சமயம் எவ்வளவு விரஸமாகப் போகின்றன என்பதையும் பார்த்துக்கொண்டுதானே இருக்கிறோம்?

அந்தக் காலத்துக்கும் இந்தக் காலத்துக்கும் எத்தனை விஷயங்களில் வித்தியாசம் இருந்தாலும் சில காரியங்களில் ஒற்றுமையும் இருந்து தொலைகிறது! நல்ல காரியம் செய்பவர்களைப் பார்த்து ஆத்திரப்படும் சுபாவம் அந்தக் காலத்தில் இருந்தது போலவே இந்தக் காலத்திலும் இருக்கிறதே!

தமிழ் நாட்டில் பூரண மதுவிலக்கு வந்தது பற்றித் தேவேந்திரன் என்ன செய்யப் போகிறானோ என்ற விசாரம் இன்னமும் என் மனதை விட்டுப் போகவில்லை! இந்திரன் எதுவும் செய்யக்கூடியவன்தான். "மெட்ராஸ் மெயில்" பத்திரிகை மதுவிலக்கை எதிர்த்துப் போடுகிற போட்டைப் பார்த்தால், ஒரு வேளை தேவேந்திரனே மாறுவேஷத்துடன் வந்து அந்தப் பத்திரிகையை நடத்துகிறானோ என்று கூடச் சில சமயம் சந்தேகிக்கத் தோன்றுகிறது!

• • •

நல்ல தம்பி என்பவன் பட்டிக்காட்டில் வாழும் ஓர் இளைஞன். கிராமத்து ஜனங்களுக்குத் தொண்டு புரியவேண்டும் என்னும் ஆவல் கொண்டவன். திடீரென்று அவனுக்கு யோகம் அடிக்கிறது. அவனுடைய உறவினரான ஒரு ஜமீன்தார் தம்முடைய மகளையும் தம்முடைய ஜமீன்தாரியையும் சேர்த்து நல்லதம்பி மணம் புரிந்து கொள்ள வேண்டும் என்று உயில் எழுதி வைத்து விட்டுக் கண்ணை மூடுகிறார்!

ஜமீன்தாரின் மகள் நவ நாகரிக வாழ்க்கையில் மிகவும் ஈடுபட்டவள். ஜமீன்தாரியை நிர்வகித்து வந்த மானேஜர் அவளுடைய நாகரிகத்துக்கு ஒத்த இளைஞன்.

நல்ல தம்பிக்கோ ஜமீன்தாரின் மகளையும் பிடிக்கவில்லை; ஜமீன்தாரி முறையும் பிடிக்கவில்லை. அந்த இரண்டுவித அபாயங்களிலிருந்தும் அவனுடைய கிராமத்துக் காதலியின் உதவியால் அவன் விடுதலை அடைகிறான். பிறகு 'கிந்தனார்' கதா காலட்சேபம் செய்து மகிழ்கிறான்!

இந்தக் குற்றமற்ற கதையை அடிப்படையாகக் கொண்ட "நல்ல தம்பி" படத்தில் ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணனுடைய நடிப்பு சோபிக்கக் கூடிய ஹாஸ்ய கட்டங்கள் ஏராளமாக இருக்கின்றன. முதலிலிருந்து முடிவு வரையில் சபையோர் ஒரே சிரிப்பாய்ச் சிரிக்கவேண்டியிருக்கிறது. படத்தில் ஆபாசமான சந்தர்ப்பமோ, கட்டமோ, நடிப்போ, ஒன்றுமில்லை. பாராட்டவேண்டிய விஷயங்கள் நிரம்ப இருக்கின்றன. காங்கிரஸ் பிரசாரத்துக்கென்றே எடுத்த படம் என்றே சொல்லக்கூடியதாக இருக்கிறது.

• • •

இந்தக் "கல்கி" இதழில் வெளியாகியிருக்கும் "மாந்தருக்குள் ஒரு தெய்வம்" பகுதியில், சம்பாரன் ஜில்லா குடியான ஸ்திரீகளின் வறுமை நிலைமையைப் பற்றி மகாத்மா சொல்லியிருப்பதை நேயர்கள் கவனிக்க வேண்டுகிறேன். "உங்கள் ஆடைகளைச் சுத்தமாக வைத்துக் கொள்ளக் கூடாதா?" என்று ஸ்ரீமதி கஸ்தூரிபாய் கேட்டதற்கு அந்த ஸ்திரீகள், "நாங்கள் உடுத்தியிருக்கும் இந்த ஒரு துணிதானே எங்களிடம் இருக்கிறது? மாற்றி உடுத்த இரண்டாவது துணி இல்லையே? எப்படிச் சுத்தமாக வைத்துக் கொள்வோம்!" என்று சொன்னார்கள். இதைக் காந்தி மகாத்மா பல பொதுக் கூட்டங்களிலும் சொல்லியதுண்டு; நம்மில் பலர் மகாத்மாவின் பேச்சைக் கேட்டு மனம் உருகியதுண்டு.

இதே விஷயத்தை ஜனங்கள் மனதில் நன்றாய்ப் பதியும்படியான முறையில் இந்தப் படத்தில் எடுத்துக் காட்டியிருக்கிறது.

புதிய ஜமீன்தார் தமது கிராமத்தைப் பார்வையிடப் போகிறார். ஒரு குடியானவனின் வீட்டுத் திண்ணையில் உட்காருகிறார். வீட்டுக்குள்ளேயிருந்து வெளியில் வந்த குடியானவன் புது ஜமீன்தாரைத் தெரிந்து கொண்டு, "கும்பிடறேனுங்க" என்று கும்பிடு போடுகிறான். புது ஜமீன்தாரைப் பார்க்கத் தன் மனையாளையும் அழைக்கிறான். அந்த மூதாட்டி வந்து புது ஜமீன்தாரைப் பார்த்துச் சந்தோஷப்படுகிறாள். வீட்டுக்குள்ளேயிருந்தபடி அவர்களுடைய மகள் புது ஜமீன்தாரைத் தானும் பார்க்கவேண்டும் என்ற ஆசையைத் தெரிவிக்கிறாள். குடியானவன் தன் மனைவியை உள்ளே சென்று மகளை அனுப்பச் சொல்லுகிறான். மகள் வெளியே வருவதற்கு நேரம் ஆகிறது. ஜமீன்தார் புறப்படப் பார்க்கிறார். குடியானவன் அவரைக் கொஞ்சம் பொறுக்க வேண்டுகிறான். கடைசியாக, மகள் வெளியே வருகிறாள். அவள் தாமதம் செய்ததற்குக் காரணம் இன்னதென்று வெளியாகிறது. உடுத்திக் கொண்டு வெளியில் வரக்கூடிய ஒரு சேலைதான் அந்த வீட்டில் இருக்கிறது. குடியானவன் மனைவி குடிசைக்குள் சென்று தான் உடுத்தியிருந்த சேலையை மகளுக்குக் கொடுத்தபிறகு அதே சேலையை அந்த இளம் பெண் உடுத்திக் கொண்டு வெளியே வருகிறாள்.

இந்தச் சம்பவம் மனதை உருக்குகிறது. இது வெறும் கற்பனையல்ல, தேசத்தில் பல்லாயிரம் குடும்பங்களில் உண்மையாகக் குடி கொண்டிருக்கும் நிலைமை என்பதை நாம் அறிந்திருப்பதால், உள்ளத்தில் வேதனை உண்டாகிறது. இலேசில் அது போவதில்லை.

அந்தக் கிராமத்துக் குடியானவனுடைய நிலைமைக்கு நேர்மாறான நிலையும் மனதில் படும்படியாக அடுத்தாற் போல் எடுத்துக் காட்டப்படுகிறது. ஜமீன்தாரின் மகள் தன் அலமாரியைத் திறக்கிறாள். அதில் ஜவுளிக் கடையில் உள்ளது போல் நூற்றுக் கணக்கான சேலைகள் அடுக்கி வைக்கப்பட்டிருக்கின்றன! "ஒருத்திக்கு இவ்வளவு சேலையா?" என்று நல்ல தம்பிக்கு ஏற்படும் அதிசயம் நமக்கும் ஏற்படுகிறது. நல்ல தம்பி அந்தச் சேலைகளையெல்லாம் எடுத்துக் கொண்டு போய்க் கிராமவாசிகளுக்கு விநியோகம் செய்வதை நம்முடைய உள்ளம் ஒப்புக் கொண்டு பாராட்டுகிறது. கணக்கில்லாமல் புதுச் சேலைகளைச் சேகரித்து அடுக்கி வைக்கும் பெரிய மனிதர் வீட்டுப் பெண்மணிகளும் ஸினிமா நட்சத்திரங்களும் பிறரும் இந்தப் படத்தை அவசியம் பார்க்க மாட்டார்களா என்றும், பார்த்துத் திருந்த மாட்டார்களா என்றும் எண்ணமிடுகிறோம்.

• • •

நல்ல தம்பி தன்னுடைய ஜமீன்தாரியில் கூட்டுப்பண்ணை முறையை அமுலுக்குக் கொண்டு வருகிறான். இன்னும் பல நன்மைகளையும் கிராமவாசிகளுக்குச் செய்கிறான். ஆனாலும் சிலருடைய மனதில் அதிருப்தி

உண்டாகிறது. சில கிராமவாசிகள் வந்து, "நீங்கள் கோயிலுக்குப் போகிற தில்லையாமே? கடவுளைக் கும்பிடுவதில்லை யாமே? 'கடவுள் இல்லை' என்று சொல்லு கிறீர்களாமே?" என்று கேட்கிறார்கள்.

"நானா கடவுள் இல்லை என்று சொன்னேன்? என்னுடைய கடவுளைக் காட்டுகிறேன், வாருங்கள்!" என்று நல்ல தம்பி அவர்களை அழைத்துப் போகிறான்.

முதலில் தன்னுடைய தாய் தகப்பன் மாரின் உருவப் படங்களைக் காட்டுகிறான்.

"அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்பது தமிழ் நாட்டு முதுமொழி.

"மாதரு தேவோ பவா! பிதரு தேவோ பவா!" என்று உபநிஷதம் முறையிடுகிறது.

பக்தன் ஒருவன் தன் பெற்றோர்களுக்குப் பணிவிடை செய்துகொண் டிருக்கும்போது பகவான் வருகிறார். பக்தன் ஒரு செங்கல்லைத் தூக்கிப் போட்டு அதில் பகவானை நிற்கச் செய்கிறான். இதனால் பகவானுக்கு 'விட்டல்' என்ற பெயர் ஏற்படுகிறது.

எல்லா மதங்களிலும் எல்லா நாடுகளிலும் பெற்றோர்களைத் தெய்வம் என்று போற்றுவது வழக்கமாயிருந்து வருகிறது.

அப்படியிருக்கும்போது அன்னை தந்தையரைக் கடவுள் என்று சொல்வதில் நமக்கு என்ன ஆட்சேபம் இருக்க முடியும்?

அந்தப்படியாக நல்ல தம்பி ஒரு திரையை இழுக்கிறான். புத்த பகவான் மோனத் திருக்கும் நிலை காணப்படுகிறது. "இவர் என் கடவுள்!" என்று சொல்கிறான்.

அதேமாதிரி இன்னொரு திரையை நல்ல தம்பி இழுத்ததும் சிலுவையில் அறைபட்ட ஏசுநாதர் தரிசனம் அளிக்கிறார்.

அடுத்த திரையண்டை நல்லதம்பி வரும்போது உள்ளே யிருப்பது யார் படம் என்று ஒருவாறு சபையோருக்குத் தெரிந்து விடுகிறது. அவர்கள் எதிர்பார்த்தது போலவே காந்தி மகாத்மாவினுடைய திரு உருவம் வெளிப்படுகிறது. உடனே சபையில் பலமான கரகோஷம் எழுகிறது!

"இவர் என் கடவுள்!" என்று பரவசமாய்ச் சொல்கிறான் நல்ல தம்பி.

"மாந்தருக்குள் ஒரு தெய்வம்" என்று நாமும் காந்தி மகாத்மாவைப் போற்றுகிறோம். உலகத்து அறிஞர்கள் எல்லாரும் காந்திஜியைத் "தெய்வ மனிதர்" என்று சொல்லி அஞ்சலி செய்திருக்கிறார்கள்.

புத்தர், ஏசு, மகாத்மா காந்தி மூவரும் மாநிலம் வாழ்வதற்காகத் தங்கள் வாழ்க்கையை அர்ப்பணம் செய்தவர்கள். பிறர்களின் துயரம் தீர்ப்பதற்காகத் தாங்கள் எல்லையில்லா இன்னல்களை அநுபவித்தவர்கள். அவர்களைக் 'கடவுளர்கள்' என்று சொல்வது சாலவும் பொருந்தும்.

ஒரு மனிதன் கோயிலுக்குப் போக வேண்டாம்; சுவாமியைக் கும்பிட வேண்டாம்; மற்ற வெளிப்படையான மதாசாரங்களை அனுஷ்டிக்க வேண்டாம்.

புத்தர், ஏசு, மகாத்மா இவர்களைப் போற்றி, இவர்கள் காட்டிய வழியில் தன் வாழ்க்கையை ஒருவன் நடத்தினான் என்றால், அவனே உண்மையான ஆஸ்திகன்.

இறந்த பிறகு மனிதர்கள் அடையக்கூடிய மோட்சம் என்று ஒன்று இருக்குமானால், அதில் மேற்கூறிய மூன்று அவதார புருஷர்களையும் பின்பற்றுகிற மனிதனுக்கு முதலாவது ஸ்தானம் கிடைக்கும் என்பதில் எனக்குச் சிறிதும் ஐயமில்லை.

நல்ல தம்பி என்ற படத்தில் நாஸ்திகப் பிரசாரத்தையோ சாதித் துவேஷப் பிரசாரத்தையோ நான் காணவில்லை.

நல்ல தம்பி உயர்ந்த இலட்சியங்களை அடிப்படையாகக் கொண்டு எழுந்திருக்கும் நல்ல படம். ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணன் தமிழ் நாட்டுக்குச் செய்துள்ள அருமையான தொண்டு என்று அதைக் கூறலாம்.

நல்ல இலட்சியங்களோடுகூட நல்ல நடிப்புத் திறமை, பிரமாதமான சிரிப்பை உண்டாக்கும் ஹாஸ்யம் ஆகியவையும் இந்தப் படத்தில் பொதிந்திருக்கின்றன.

ஆனால் உயர்தரப் படங்களில் நாம் எதிர்பார்க்கக் கூடிய 'டெக்னிக்' உயர்வு இதில் காணப்படவில்லை. சமீபகாலத்தில் சினிமாக் கலையின் 'நுட்ப சாஸ்திர'த்தில் ஏற்பட்டிருக்கும் அபிவிருத்தி ஒன்றையும் இதில் காண முடியாது. ஒலிப்பதிவு, ஒளிப்பதிவு, காட்சி ஜோடனை எல்லாம் சாமான்யந்தான்.

நல்ல 'டெக்னிக்'கை விரும்புகிறவர்கள் வேறு படங்களைப் பார்க்கப் போங்கள்.

நல்ல இலட்சியம், நல்ல நடிப்பு, நல்ல சிரிப்பு,— இவற்றை விரும்புகிறவர்கள் "நல்ல தம்பி" படத்தைப் பாருங்கள்.

இது ஒரு அறிவிப்பே தவிர, பிராஸ்பெக்டஸ் அல்ல.

# தி நியூ இந்தியா டிரேடிங் கம்பெனி லிமிடெட்,

**ஜெனரல் மர்ச்சண்ட்ஸ், கமிஷன் ஏஜண்ட்ஸ், டிஸ்ட்ரிபூடர்ஸ் & ரெப்ரஸெண்டேடிவ்ஸ்**

## சிதம்பரம்

ஸ்தாபிதம்: 1939

**பிராஞ்சுகள்:** செண்ட்ரல் ஸ்டோர்ஸ், சிதம்பரம்
பம்பாய் ஸ்டோர்ஸ், சிதம்பரம்
ராமன் ஸ்டோர்ஸ், விருத்தாசலம்

**மொத்த வியாபார பிராஞ்சுகள்:**
கடலூர் O. T.
ரயிலடி, மாயவரம்

**அதிகாரம் பெற்ற மூலதனம்: ரூ. 6,00,000**

*2500 ஆர்டினரி ஷேர்கள், ஷேர் 1-க்கு ரூ. 100/- விதம் ரூ. 2,50,000*

*2500 ஆறு பெர்஧ெண்ட் பிரிபரன்ஸ் ஷேர்கள், ஷேர் 1-க்கு ரூ. 100/- விதம் வருமான வரி இல்லாமல் ரூ. 2,50,000*

*1000 ஆறு பெர்஧ெண்ட் ரெடீமபிள் குமுலேடிவ் பிரிபரன்ஸ் ஷேர்கள், வருமான வரி இல்லாமல் கம்பெனியாரின் விருப்பப்படி 1955 முதல் 1957-க்குள் பணத்தைத் திரும்ப பெற்றுக் கொள்ளக் கூடியது, ஷேர் 1-க்கு ரூ. 100/- விதம் ரூ. 1,00,000*

**வழங்கி ஒதுக்கப்பட்ட மூலதனம்:**
**23-4-1949-ல் உள்ளபடி ரூ. 1,80,300-0-0**
**செலுத்தப்பட்ட மூலதனம் ரூ. 1,35 998-11-1**
**ரிஸர்வ் முதலிய நிதிகள் ரூ. 1,03,884-9-7**

**தற்போதைய வெளியீடு:**

1. *1500 ஆர்டினரி ஷேர்கள், ஷேர் 1-க்கு ரூ. 100/-*
2. *1500 ஆறு பெர்஧ெண்ட் வருமான வரி இல்லாத பிரிபரன்ஸ் ஷேர்கள், ஷேர் 1-க்கு ரூ. 100/-*
3. *1000 ஆறு பெர்஧ெண்ட் வருமான வரி இல்லாத ரெடீமபிள் குமுலேடிவ் பிரிபரன்ஸ் ஷேர்கள், ஷேர் 1க்கு ரூ. 100/-*

**பணம் செலுத்த வேண்டிய விபரம்:**
**முதல் இரண்டு ஐட்டங்களுக்கு**

*அப்ளிகேஷனுடன் ஷேர் 1-க்கு ரூ. 25/-ம், பிரவேசக் கட்டணம் அணா 8-ம், அலாட்மெண்ட் ஆனவுடன் ரூ. 25-ம், பாக்கியை பிறகு 2 தவணைகளிலும் செலுத்த வேண்டும். 3-வது ஐட்டம் ரெடீமபிள் குமுலேடிவ் பிரிபரன்ஸ் ஷேர்களுக்கு அப்ளிகேஷனுடன் ரூ. 50/-ம், பிரவேசக் கட்டணம் அணா 8-ம், அலாட்மெண்ட் ஆனவுடன் ரூ. 50-ம் செலுத்த வேண்டும்.*

*ரிஜிஸ்டர்ட் ஆபிஸ்:*
**45-46, மேலவீதி - சிதம்பரம்**

*ஆடிட்டர்:*
**ஸ்ரீ G. நடேசன், G. D. A., R. A.,**
**டபீர் நடுத் தெரு, கும்பகோணம்**

## போர்டு ஆப் டைரக்டர்கள்:

1. ஸ்ரீ D. கிருஷ்ணமூர்த்தி ஐயர், B. A. (Hons) B. L., வக்கீல் — சிதம்பரம்
2. ஸ்ரீ N. M. பொன்னம்பலம் பிள்ளை, பிரஸிடெண்ட்: தென்னாற்காடு ஜில்லா நூல் வியாபாரிகள் சங்கம்; சேர்மன்: தெஷனல் ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட், இந்தியா என்வெலப்ஸ் லிமிடெட்; டைரக்டர்: ஹிந்து சாசுவத ஜனோபகார நிதி லிமிடெட், நேஷனல் பிரிண்டர்ஸ் & டிரேடர்ஸ் லிமிடெட்; பார்ட்னர்: கஸ்தூரிபாய் கம்பெனி, மர்ச்சண்ட்ஸ் பைனான்சிங் கார்ப்பொரேஷன்; மிராசுதார், அரிசி & நூல் ஜவுளி வியாபாரம்—சிதம்பரம்.
3. ஸ்ரீ N. ஸ்ரீனிவாஸ ரெட்டியார், டைரக்டர்: நேஷனல் ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட், ஹிந்து சாஸ்வத ஜனோபகார நிதி லிமிடெட்; பார்ட்னர்: மர்ச்செண்ட்ஸ் பைனான்சிங் கார்ப்பொரேஷன்; Ex. முனிசிபல் சேர்மன் — சிதம்பரம்.
4. ஸ்ரீ A. ரெங்கநாத செட்டியார், மளிகை வியாபாரம் & கமிஷன் ஏஜண்ட்-சிதம்பரம்.
5. ஜனாப் M. முகம்மது இஸ்மாயில் சாஹிப், பிரஸிடெண்ட்: பஞ்சாயத்து போர்டு; டைரக்டர்: ஆஜாத் ஹிந்த் ஜுவெல்லரி மார்ட் லிமிடெட்; மிராசுதார் & வியாபாரம், லால்பேட்டை
6. ஸ்ரீ R. ராமலிங்கம் பிள்ளை, டைரக்டர்: நேஷனல் ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட், கோவாபரேடிவ் லாண்ட் மார்ட்கேஜ் பாங்க் லிமிடெட், மிராசுதார் — ஒரத்தூர்.
7. R. S. ராஜகோபால், மானேஜிங் டைரக்டர்: நேஷனல் ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட், இந்தியா என்வெலப்ஸ் லிமிடெட்; டைரக்டர்: நேஷனல் பிரிண்டர்ஸ் & டிரேடர்ஸ் லிமிடெட்; பார்ட்னர்: மர்ச்செண்ட்ஸ் பைனான்சிங் கார்ப்பொரேஷன் — சிதம்பரம்.
8. ஸ்ரீ S. K. சடகோப நாயுடு, டைரக்டர்: C. H. S. J. நிதி லிமிடெட், பாங்கர் & பாத்திர வியாபாரம், சிதம்பரம்.

மானேஜிங் டைரக்டர்:

9. ஸ்ரீ R. S. ராமானுஜம், பிரஸிடெண்ட்: சிதம்பரம் சேம்பர் ஆப் காமர்ஸ்; டைரக்டர்: நேஷனல் ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட், நேஷனல் பிரிண்டர்ஸ் & டிரேடர்ஸ் லிமிடெட், இந்தியா என்வெலப்ஸ் லிமிடெட்; பார்ட்னர்: கஸ்தூரிபாய் கம்பெனி, மர்ச்செண்ட்ஸ் பைனான்சிங் கார்ப்பொரேஷன், அஜந்தா ஆர்ட் & கமர்ஷியல் ஏஜென்ஸீஸ், சிதம்பரம்.

ஷை கம்பெனியானது 1939-ம் வருஷம், முக்கியமாக நவதான்யங்கள், உணவுப் பொருட்கள், எண்ணை, எண்ணை வித்துக்கள், ஸ்டேஷனரி சாமான்கள், மருந்து சாமான்கள், வாசனை திரவியங்கள் முதலிய பொருட்களில் வியாபாரம் செய்யும் பொருட்டு ஆரம்பிக்கப்பட்டது. 24—4—1939 முதல் 23—4—1949 வரை, கடந்த 10 வருடங்களுக்கு கம்பெனியின் முன்னேற்ற விவரங்களை கீழே கொடுத்திருக்கிறோம். கம்பெனியின் மானேஜிங் டைரக்டருக்கு மாதச் சம்பளம் கொடுப்பதில்லை. செலவுகள் போக நிகர லாபத்தில் ஐந்தில் ஒருபாகமே ஊதியமாக கொடுக்கப்படுகிறது. ஆகையால் அதிக லாபம் சம்பாதிக்க சிரத்தையுடன் வேலை செய்கிறார்.

### கம்பெனியின் முன்னேற்ற விவரம்

| வருஷம் | செலுத்தப்பட்ட மூலதனம் | | | வருஷ வியாபாரம் | | | நிகர லாபம் | | | ரிஸர்வ் நிதியும் இதர பண்டுகளும் | | | வருமான வரி நீக்களாக சாதாரண ஷேர்களுக்கு அளித்த டிவிடெண்டு | வருமான வரி நீக்களாக பிரிபரன்ஸ் ஷேர்களுக்கு அளிக்கப்பட்ட போனஸும் டிவிடெண்டும் டிவி. | Cur. |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1939–40 | 35,992 | 13 | 6 | 4.04,183 | 5 | 11 | 5,495 | 0 | 11 | 1,095 | 0 | 0 | 10% | 6% | 1½% |
| 1940–41 | 41.467 | 13 | 6 | 4.64,375 | 6 | 10 | 4,374 | 11 | 1 | 1.975 | 0 | 0 | 9% | 6% | ... |
| 1941–42 | 42,417 | 13 | 6 | 7,00,233 | 3 | 11 | 24,512 | 8 | 3 | 6.895 | 0 | 0 | 15% | 6% | 6% |
| 1942–43 | 67,248 | 13 | 6 | 16.19,318 | 14 | 6 | 88,715 | 7 | 8 | 44,696 | 0 | 2 | 21% | 6% | 12% |
| 1943–44 | 70,877 | 13 | 6 | 13.41,131 | 4 | 5 | 34,266 | 15 | 1 | 51,551 | 0 | 2 | 18% | 6% | 9% |
| 1944–45 | 87,937 | 13 | 6 | 11.48.431 | 10 | 8 | 21,956 | 14 | 11 | 57,151 | 0 | 2 | 18% | 6% | 6% |
| 1945–46 | 1,33.258 | 1 | 7 | 15,32,963 | 6 | 1 | 49.525 | 14 | 11 | 61,834 | 9 | 7 | 18% | 6% | 6% |
| 1946–47 | 1.34,199 | 15 | 3 | 13.31,199 | 12 | 1 | 12,580 | 11 | 11 | 72,254 | 9 | 7 | 12% | 6% | 1½% |
| 1947–48 | 1,35,149 | 0 | 7 | 17,29,834 | 6 | 4 | 32,842 | 14 | 5 | 78,834 | 9 | 7 | 15% | 6% | 3% |
| 1948–49 | 1.35,698 | 11 | 1 | 27.13.590 | 4 | 1 | 74,486 | 12 | 9 | 1,03,884 | 9 | 7 | 15% | 6% | 3% |

### ஷேர்களுக்கான அப்ளிகேஷன்

ஷேர் அப்ளிகேஷன் பாரங்கள் கம்பெனிக்கு எழுதிப் பெற்றுக் கொள்ளலாம். அல்லது ஆர்டினரி & பிரிபரன்ஸ் ஷேர்களுக்கு ஷேர் 1-க்கு ரூ. 25/- வீதமும், ரெடீமபில் குமுலேடிவ் பிரிபரன்ஸ் ஷேர்களுக்கு ஷேர் 1-க்கு ரூ. 50/- வீதமும், பிரவேசக் கட்டணம் ஷேர் 1-க்கு 8 அணாவுடன் அனுப்பி லெட்டர் மூலமாகவே மனுச்செய்து கொள்ளலாம்.

### அலாட்மெண்ட்

ஷேர்களை அலாட் செய்வதில் கம்பெனியின் டைரக்டர்கள் உசிதம்போல் எல்லா ஷேர்களையும் அலாட் செய்யவோ அல்லது ஷேர்களைக் குறைவாக அலாட் செய்யவோ அல்லது எக்காரணமும் சொல்லாமல் அப்ளிகேஷனையே பூராவாக மறுக்கவோ அதிகாரம் உண்டு.

கம்பெனியின் மெமோராண்டம் & ஆர்டிகில்ஸ் ஆப் அஸோஸியேஷன் காப்பி 1-க்கு ரூ. 1—0—0 அனுப்பி தபால் மூலம் பெற்றுக் கொள்ளலாம்.

கம்பெனியின் பிராஸ்பெக்டஸின் காப்பிகள், எழுதினால் இலவசமாக அனுப்பப்படும்.

சிதம்பரம்
25—4—49

**ஆர். எஸ். ராமானுஜம்**
மானேஜிங் டைரக்டர்

# அலை ஓசை

## கல்கி

### இருபதாம் அத்தியாயம்

### அதிர்ச்சிக்குமேல் அதிர்ச்சி

பொதுக் கூட்டத்தில் சீதாவைப் பற்றி அவதூறாக எழுதிய துண்டுப் பிரசுரம் விநியோகிக்கப் பட்டதல்லவா? அதனால் மனம் நொந்து போன சீதாவுக்கு மற்றொரு அதிர்ச்சி அடுத்து ஏற்பட்டது. அது சூரியாவிடமிருந்து வந்த கடிதந்தான். அந்தக் கடிதத்தில் "சென்னைக்கு நான் போய்ச் சேர்ந்த அன்றைக்கே எதிர்பாராத விதமாகச் சௌந்தரராகவனும் சிறையிலிருந்து திரும்பி வந்து விட்டார்!" என்று சூரியா எழுதியிருந்ததைப் படித்ததும் சீதாவுக்கு ஓர் அதிர்ச்சி ஏற்பட்டது. அது வியப்புடன் மகிழ்ச்சியும் கலந்த அதிர்ச்சி. அந்த வாக்கியத்தைப் படித்தவுடன் சீதாவுக்குத் தன்னுடைய துன்பங்களெல்லாம் தீர்ந்துவிட்டதாகத் தோன்றியது. உடனே பறந்து போய்ச் சௌந்தரராகவனை அடைந்து விட வேண்டும் என்னும் அளவிலா ஆவல் உண்டாயிற்று. ஆனால் மேலே சூரியா எழுதியிருந்ததைப் படித்ததும் ஏமாற்றமும் துயரமும் கலந்த அதிர்ச்சி ஏற்பட்டது. சூரியா தனக்கு நேர்ந்த அனுபவங்களைச் சுருக்கமாகச் சொல்லி விட்டுக் கடிதத்தைப் பின்வருமாறு முடித்திருந்தான் :—

"அத்தங்கா! உன் கணவர் திரும்பி வந்ததும் உன்னை அவரிடம் சேர்த்து வைக்கவேண்டும் என்று எவ்வளவோ ஆசை கொண்டிருந்தேன். உங்களுக்குள் ஏற்பட்டிருக்கும் தப்பபிப்பிராயங்களையெல்லாம் என்னுடைய சாமர்த்தியமான பேச்சினால் போக்கி விடலாம் என்று எண்ணியிருந்தேன். இனிமேல் உங்களுக்கு என்றைக்கும் சச்சரவு ஏற்படாதபடி சிநேகம் செய்து வைக்க வேண்டும் என்று ஆவலாயிருந்தேன். அதெல்லாம் வெறும் பகற் கனவாக முடிந்தது.

பல காரணங்களினால் எனக்குத் தற்சமயம் ஊருக்குத் திரும்பி வர இஷ்டம் இல்லை. இங்கிருந்து டில்லிக்குப் பிரயாணமாகிறேன். அங்கிருந்து மறுபடியும் கடிதம் எழுதுகிறேன்.

ஒருவேளை கல்கத்தா போன பிறகு உன்னுடைய கணவரின் மனம் மாறி உனக்கு ஏதாவது கடிதம் எழுதினால் எனக்குத் தெரியப்படுத்தக் கோருகிறேன். என் டில்லி விலாசந்தான் உனக்குத் தெரியுமே?

கடைசியாக ஒரு விஷயம். நான் சொல்லப் போவது உனக்குப் பிடிக்காவிட்டால் மன்னித்துவிடு. பட்டாபிராமன் தேர்தல் சேற்றில் இறங்கியதும் எனக்குப் பிடிக்கவில்லை. அவனுக்காக நீ தேர்தல் வேலை செய்வதையும் நான் விரும்பவில்லை. கூடிய வரையில் நீ வெளியில் கிளம்புவதை நிறுத்திக் கொள்வது நலம். உலகம் பொறாமை நிறைந்த பொல்லாத உலகம். தேவபட்டணமோ ரொம்பவும் சிற்றறிவு படைத்த மக்கள் நிறைந்தது. இதற்கு மேல் நான் சொல்லவேண்டியதில்லை."

இதைப் படித்து முடித்ததும் சீதாவுக்கு வந்த துயரத்தையும் ஆத்திரத்தையும் சொல்ல முடியாது. உலகத்தின் பேரிலும் கடவுள் பேரிலுமே கோபம் வந்தது. அதைக் காட்டிலும் தான் பெற்ற பெண்ணாகிய வஸந்தி கண்மணியின் பேரிலும் கோபம் வந்தது. அம்மா வேண்டியதில்லையென்று எண்ணித்தானே வஸந்தி

அப்பாவுடன் கல்கத்தா போய்விட்டான்? அவள் இனிமேல் எனக்குப் பெண் இல்லை என்று சபதம் கூறும் வரைக்கும் சீதாவின் கோபம் வரம்பு மீறிப் பொங்கியது.

இந்தச் சூரியா எனக்கும் அவருக்கும் நடுவில் மத்தியஸ்தம் செய்து வைக்கப் பார்த்தானாம்! இவன் யார் மத்தியஸ்தம் செய்வதற்கு? அவருக்கு மனைவி வேண்டும் என்ற எண்ணம் இல்லாவிட்டால் எனக்கும் புருஷன் வேண்டியதில்லை! அவ்வளவு அகங்காரமும் வைஷம்யமும் உள்ள புருஷனிடம் போய்ச் சேர்ந்துதான் என்ன பிரயோஜனம்? எவ்வளவு நாளைக்கு ஒத்து வாழ முடியும்? இத்தனை நாள் பிரிந்திருந்ததினால் அவருடைய உள்ளத்தில் எந்தவித மாறுதலும் ஏற்படவில்லை என்றே தோன்றுகிறது. நான் மட்டும் எதற்காகப் போய் அவர் காலில் விழுந்து சரணாகதி அடைய வேண்டும்? வேண்டவே வேண்டாம்.

இந்தச் சூரியாவின் யுக்தியைப் பார்! நான் தேர்தல் வேலையில் தலையிடுவது இவனுக்குப் பிடிக்கவில்லையாம்! எதற்காக இவனுக்குப் பிடிக்க வேண்டும்? அந்தத் தாரிணி என்ன செய்தாலும் சூரியாவுக்குப் பிடிக்கும்! அவள் ஆண் பிள்ளைகளைப்போல் வேஷ்டி கட்டிக்கொண்டு ஊரைச் சுற்றி வந்தாலும், 'அடாடா! என்ன தைரியம்!' என்பான். நான் எது செய்தாலும் அவனுக்குப் பிடிக்காது. எதற்காகப் பிடிக்க வேண்டும்? இவனுக்குப் பிடிக்கிற காரியத்தைச் செய்யத்தானா நான் பெண் பிறந்திருக்கிறேன்? நான் மேடையில் ஏறி நாலு வார்த்தை பேசினாலும் அதற்காகச் சந்தோஷப்பட்டு மெச்சுகிறவர்கள் இல்லாமற் போகவில்லை! அவர்களுடைய அன்பும் அபிமானமும் எனக்குப் போதும்! * * *

இத்தகைய மனோபாவத்துடனேயே சீதா தனக்கு நேர்ந்த ஏமாற்றத்தையும் அதிர்ச்சியையும் சகித்துக்கொண்டு மறுபடியும் வெளிப்படையாகக் குதூகலமாயிருக்கத் தொடங்கினாள். பட்டாபிராமனுடன் பார்ட்டிகளுக்கும் கூட்டங்களுக்கும் போகலானாள்.

சூரியாவினிடமிருந்து வந்த கடிதத்தை அவள் யாரிடமும் காட்டவில்லை. ஆயினும் சூரியா தன் குழந்தையை அழைத்து வராததின் காரணத்தை மட்டும் சொல்லுவது அவசியமாயிற்று. சௌந்தரராகவன் சீமையிலிருந்து திரும்பி வந்து வஸந்தியை அழைத்துக்கொண்டு கல்கத்தா போய்விட்டதாகவும் அதனாலேதான் சூரியா குழந்தையை அழைத்துக் கொண்டு வரவில்லையென்றும் லலிதாவிடம் கூறினாள். லலிதா மற்றதையெல்லாம் ஒருவாறு ஊகித்துக் கொண்டு முன்னைக் காட்டிலும் சீதாவை அதிக அபிமானத்துடன் நடத்தி வந்தாள்.

ஆனால் லலிதாவின் தாயாருக்கு விஷயம் தெரிந்தபோது அவளுடைய வாய் சும்மா இருக்கவில்லை. பட்டாபிராமனும் லலிதாவும் போட்ட வாய்ப்பூட்டு உத்தரவுகள் சரஸ்வதி அம்மாளிடம் செல்லவில்லை. எது எப்படியிருந்தாலும் பெண்ணைப் பிறந்தவர்கள் புருஷனோடு போய் இருக்க வேண்டிய அவசியத்தைப் பற்றி ஜாடைமாடையாகப் பேசிக் கொண்டிருந்தாள். இது சீதாவுக்குத் தெரிந்தபோது அவளுக்கு லலிதாவின் பேரில் கோபம் வந்தது. தன்னை அவமானப்படுத்துவதற்காகவே லலிதா தன் தாயாரை அழைத்துக்கொண்டு வந்து வீட்டில் வைத்திருப்பதாக நினைத்தாள். மாமி என்ன வேண்டுமானாலும் உளறட்டும்; லலிதா என்ன வேணுமானாலும் நினைத்துக் கொள்ளட்டும். பட்டாபிராமன் தன்னை இந்த வீட்டின் ராணியாக மதித்து மரியாதை செய்து கொண்டிருக்கிறான். அப்படியிருக்கும்போது தான் யாருக்குப் பயப்பட வேண்டும்?

இப்படிச் சீதாவின் உள்ளத்தில் சண்டமாருதம் சுழன்று சுழன்று அடித்து அவளை அப்படியும் இப்படியும் ஆட்டி வைத்துக் கொண்டிருக்க, நாட்கள் சென்று கொண்டிருந்தன.

சேர்மன் தேர்தல் தினம் நெருங்கி வந்தபோது ஒன்றன்பின் ஒன்றாகச் சீதாவுக்குப் பல அதிர்ச்சிகள் ஏற்பட்டு அவளைக் கதிகலங்கச் செய்தன.

டில்லியிலிருந்து கடிதம் வந்தது. சூரியா எழுதியிருந்தான். "தாரிணியிடம் கலந்து ஆலோசித்தேன். உனக்கும் உன் புருஷனுக்கும் மத்தியில் மற்றவர்கள் தலையிடுவதால் இமை

தான் விளையும் என்று தாரிணி அபிப்பிராயப்படுகிறாள். நீயே கல்கத்தாவுக்குச் சென்று அவரிடம் மனம் விட்டுப் பேசிவிடுவதுதான் நல்லது என்று கருதுகிறாள். அத்தங்கா! முன்னொரு சமயம் நீ இப்படிச் செய்வதென்று தீர்மானித்திருந்தாய். உன் கணவரிடம் போய் 'போனதெல்லாம் போகட்டும்; இனிப் புதிய வாழ்க்கை தொடங்குவோம்' என்று சொல்லிக் கொள்ள எண்ணியிருந்தாய். யாரும் எதிர்பாராத காரணத்தினால் அது தடைப்பட்டு விட்டது. அந்தத் தீர்மானத்தை இப்போது ஏன் நிறைவேற்றக் கூடாது? நீ உடனே கல்கத்தாவுக்குப் புறப்பட்டுப் போவதுதான் நல்லது என்று எனக்கும் தோன்றுகிறது. இங்கே புது டில்லியில் மாஜி திவானுடைய குமாரிகள் இருவர் இருந்தார்களே, ஞாபகம் இருக்கிறதா? அவர்கள் கல்கத்தாவுக்குப் போயிருப்பதாக அறிகிறேன். இதனால் என்னுடைய கவலை அதிகமாகியிருக்கிறது. இந்த நிலைமையில் நீ கல்கத்தாவுக்கு உடனே புறப்படுவது நல்லதல்லவா?"

இதைப் படித்ததும் எரிகிற தீயில் எண்ணெய் விட்டது போலாயிற்று சீதாவுக்கு. அப்படியா சமாசாரம்? அவர் 'வா' என்று கூட அழைக்காமல் நானாகப் போய் அவர் காலில் விழ வேண்டுமா? முடியவே முடியாது! அவர் எந்தப் பேய் பிசாசை வேண்டுமானாலும் கட்டிக் கொண்டு அழட்டும்! எனக்கு என்ன வந்தது? நான் மேடை பீடத்தினால் கண் கொட்டாமல் என்னைப் பார்த்து நான் சொல்லும் வார்த்தையைப் பயபக்தியுடன் கேட்பதற்கு ஆயிரம் பதினாயிரம் பேர் காத்திருக்கிறார்கள். புது டில்லியில் ஒன்றும் அறியாத பெண்ணாயிருந்த பழைய சீதா அல்ல நான்! ஒருவர் காலிலும் போய் விழுந்து கெஞ்ச வேண்டிய அவசியம் இல்லை எனக்கு!......

சேர்மன் தேர்தல் நடந்த தினத்தன்று சீதாவுக்கு இரு கடிதங்கள் வந்தன. அவற்றில் ஒன்று கல்கத்தாவிலிருந்து வந்திருந்தது. பின்வருமாறு சித்ரா எழுதி யிருந்தாள் :—

"என் அருமை சிநேகிதியே! உன்னை எவ்வளவோ புத்திசாலி என்று நான் நினைத் திருந்தேனே! இது என்ன பைத்தியக்காரத்தனம்! உன் கணவர் இங்கே எங்களுக்கு எதிர் வீட்டு மச்சிலேதான் இருக்கிறார். காலையிலும் மாலையிலும் அவர் ஜன்னல் ஓரமாக வந்து உட்கார்ந்து பிரமை பிடித்தவர் போல் இருப்பதைப் பார்த்தால் எனக்குப் பரிதாபமாயிருக்கிறது. என் கணவர் அவரைச் சிரமப்பட்டுச் சிநேகம் செய்து கொண்டிருக்கிறார். இரண்டொரு நாள் நானும் இவருடன் போய் உன் குழந்தையைப் பார்த்து விட்டு வந்தேன். என்ன அதிசயமான குழந்தையடி அது? அப்படிப்பட்ட அருமைக் குழந்தையை நீ என்னமாக விட்டுப் பிரிந்திருக்கிறாய்?

"ஒருநாள் வஸந்தி எங்கள் வீட்டுக்கு வந்திருந்தாள். என் வாய் சும்மா இருக்கக் கூடாதா? 'உன் அம்மா எப்போ வரப் போகிறாள்?' என்று கேட்டுவிட்டேன். 'எங்க அம்மா வரவேமாட்டாள்' என்றாள் குழந்தை. 'ஏன்?' என்றேன். 'எங்க அம்மாவுக்கு அப்பாவைக் கண்டால் பிடிக்காது' என்றாள். 'உனக்கு யாரைப் பிடிக்கும்?' என்று கேட்டேன். 'எனக்கு அப்பாவையும் அம்மாவையும் பிடிக்கும்' என்றாள். 'அப்படியானால் நீ அப்பாவோடேயே இருக்கிறாயே? அம்மாவைப் பார்க்க ஆசையாயில்லையா?' என்றேன். 'ஆசையாகத்தான் இருக்கிறது. அதற்கு என்ன செய்கிறது? எங்க அப்பா தனியாக இருக்கிறாரே? அவரை விட்டுவிட்டு எப்படிப் போகிறது?' என்றாள். சீதா! இந்தக் குழந்தையைப் பெற்ற தாய் நீதானே? குழந்தைக்கு இருக்கும் ஈவிரக்கத்தில் பத்தில் ஒன்றாவது உனக்கு இராமற் போய்விடுமா?

"இரண்டு நாளைக்கு முன்னால் உன் கணவர் உன்னைப்பற்றி என்ன நினைத்துக்கொண்டிருக்கிறார் என்பதை இவர் தெரிந்து கொண்டார். சில நாளாக இரண்டு அதி நாகரிகப் பெண்மணிகள் எதிர் வீட்டுக்கு வந்து கொண்டிருக்கிறார்கள். வெகு நேரம் உன் கணவரிடம் பேசிவிட்டுப் போகிறார்கள். என் கணவருக்கு இது கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை. ஒரு நாள் அந்தப் பெண்கள் யார் என்று கேட்டாராம். 'டில்லியில் எனக்குத் தெரிந்தவர்கள்!' என்றாராம். 'ரொம்ப நெருங்கிய

சிநேகிதம் போலிருக்கிறதே!' என்று இவர் கேட்டாராம். 'இன்னும் ரொம்ப நெருங்கிய சிநேகமாக வேணும் என்று பார்க்கிறார்கள். என்னைக் கலியாண வலையில் சிக்கவைக்கப் பிரயத்தனப் படுகிறார்கள்!' என்றாராம். அவருடைய மனதை இன்னும் நன்றாய் அறிவதற்காக இவர், 'நீங்களும் எத்தனை காலம் தனியாக வாழ்க்கை நடத்த முடியும்? இரண்டு பேரில் ஒருவரைக் கலியாணம் செய்து கொள்வதுதானே?' என்று கேட்டதற்கு, உன் கணவர் என்ன பதில் சொன்னார், தெரியுமா? 'தெய்வம் இருந்த கோயிலில் பிசாசைக் குடியேற்றச் சொல்கிறீர்களா?' என்றாராம்.

"என் அருமை சிநேகிதியே! உன்னை உன் கணவர் 'தெய்வம்' என்று வாய் திறந்து சொல்லியிருக்கிறார். நீ எங்கேயோ போய் உட்கார்ந்திருக்கிறாய். இந்த வெட்கக் கேட்டை நான் என்னவென்று சொல்வது?

"அதெல்லாம் போகட்டும். நேற்று முதல் வஸந்திக்குச் சுரம் அடிக்கிறதாம். குழந்தை தூக்கத்தில் 'அம்மா வரமாட்டாள்' என்று பிதற்றுகிறாளாம். உன் மனதில் கொஞ்சமாவது சுரம் என்பது இருந்தால் உடனே புறப்பட்டு வந்து சேரு!"

இந்தக் கடிதம் சீதாவைக் கலங்க வைத்து விட்டதில் ஆச்சரியம் இல்லையல்லவா? சித்ரா எழுதியிருப்பதெல்லாம் உண்மையாயிருக்குமா? அல்லது தன்னை வரவழைப்பதற்காகக் கற்பனை செய்து எழுதியிருக்கிறாளா? அவர் தன்னைத் 'தெய்வம்' என்று குறிப்பிட்டது நிஜமா? அப்படியானால் 'உடனே புறப்பட்டு வா!' என்று ஒரு வரி ஏன் எழுதிப் போடக் கூடாது? குழந்தைக்குச் சுரம் என்பதும் பொய்தானோ, என்னமோ? ஒருவேளை உண்மையாக இருந்து விட்டால்?............ கடவுளே! என் குழந்தையைக் காப்பாற்று! நான் செய்திருக்கும் பாவங்களுக்காக எனக்கு என்ன தண்டனை விதித்தாலும் ஏற்றுக் கொள்கிறேன். என் குழந்தைக்கு ஒன்றும் நேராமல் இருக்கட்டும். சித்ரா எழுதியிருப்பது உண்மையானாலும் கற்பனையானாலும் உடனே புறப்பட்டுப் போக வேண்டியதுதான். இனிமேல் தாமதிக்கக் கூடாது. இன்றிரவே லலிதாவிடமும் பட்டாபிராமனிடமும் சொல்லிக் கொண்டு புறப்பட வேண்டியதுதான்!

இவ்விதம் எண்ணிக் கொண்டே சீதா தன் பெயருக்கு வந்திருந்த இன்னொரு உறையைப் பிரித்தாள். அதற்குள்ளே அச்சடித்த பத்திரிகைத் துண்டு ஒன்று இருந்தது. இரண்டு நாளைக்கு முன்பு லலிதாவுக்கு வந்த அதே பத்திரிகைத் துணுக்குத்தான். லலிதா மட்டும் அதைப் பார்த்துச் சீதா பாராமல் இருந்து விடப் போகிறாளே என்ற கவலையினால் யாரோ ஒரு புண்ணியவான் கர்ம சிரத்தையாக அதைச் சீதாவுக்கும் அனுப்பி வைத்திருந்தான்!

அந்தப் பத்திரிகைத் துணுக்கைப் படித்த போது சீதாவுக்குக் கண்கள் இரண்டும் பற்றி எரிவது போலத் தோன்றியது. அவமானம் பொறுக்க முடியவில்லை. பூமி பிளந்து அதற்குள்ளே தான் போய்விடக் கூடாதா? அந்தமாதிரி பாக்கியம் ஜனகமகாராஜனுடைய புத்திரியாகிய சீதாதேவிக்குக் கிடைத்தது. மகா பாவியாகிய தனக்கு அந்த பாக்கியம் எங்கே கிடைக்கப் போகிறது?

சொல்ல முடியாத, சகிக்க முடியாத அவமானத்தினால் சிறிது நேரம் பிரமை பிடித்திருந்த பிறகு கொஞ்சங்கொஞ்சமாகச் சீதாவுக்குச் சுய உணர்வு வந்து சிந்தனா சக்தி ஏற்பட்டது. இரண்டு நாளாக லலிதாவின் நடத்தையில் ஏற்பட்டிருந்த மாறுதலுக்கு இதுதான் காரணமோ? இந்த மாதிரி ஒரு விஷயம் வந்திருப்பதைப் படித்த பிறகும் லலிதா தன்னை இந்த வீட்டுக்குள் வைத்துக் கொண்டிருந்தாளா? அப்படியானால் அவள்தான் சீதை, சாவித்திரி, தமயந்தி எல்லாரும்! அவளுடைய முகத்தில் தான் இனி விழிக்க முடியாது. பட்டாபிராமனையும் ஏறெடுத்துப் பார்க்க முடியாது. அவர்களிடம் சொல்லிக் கொள்ளாமலே கிளம்பி விட வேண்டியதுதான்; இரவில் எல்லாரும் படுத்துத் தூங்கியான பிறகு!

தான் செய்ய வேண்டியதைப் பற்றிச் சீதாவுக்கு ஏதாவது கொஞ்சம் சந்தேகம் இருந்தாலும், அன்றிரவு பத்து மணிக்கு மேல் கீழ்க்கட்டில் நடந்த சம்பவத்தினால் அது தீர்ந்து போய்விட்டது. அது சின்ன வீடு. லலிதாவுக்கும் பட்டாபிராமனுக்கும் படுக்கை

யறையில் நடந்த சம்பாஷணையோ உரத்த சத்தத்தில் நடைபெற்றது. அதில் பாதிக்கு மேல் சீதாவின் காதில் விழுந்து அவளை இந்த உலகத்திலேயே நரக வேதனைக்கு உள்ளாக்கியது.

புருஷனும் மனைவியும் எப்போது தூங்கப் போகிறார்கள் என்று சீதா காத்திருந்தாள். பேச்சுக் குரல் அடங்கி ஒரு மணி நேரத்துக்குப் பிறகு புறப்பட எண்ணினாள். அதுவரையில் படுக்கையிலே குப்புறப் படுத்துக் கொண்டு தான் பெண் பிறந்தது முதல் நாளது வரையில் அநுபவித்த துன்பங்களை யெல்லாம் ஒவ்வொன்றாய் நினைத்துப் பார்த்துக் கொண்டாள். உலகத்தில் எத்தனையோ பெண்கள் பிறந்து வாழ்கிறார்களே? அவர்களில் யாராவது தன்னைப் போலக் கஷ்டப்பட்டதுண்டா? தன்னை மட்டும் கடவுள் ஏன் இப்படிச் சோதனை செய்கிறார்? ஏதோ ஒரு தமிழ் சினிமாவில் கதாநாயகி 'பேதையாய்ப் பிறந்த நானாய்' என்று பாடியிருப்பது சீதாவுக்கு நினைவு வந்தது. அந்த சோக கட்டத்துப் பாட்டு அவள் துயரத்தை அதிகமாக்கிற்று. அவளை யறியாமல் விம்மல் வந்தது. கீழே இருப்பவர்களுக்குக் கேட்காமலிருக்க வேண்டுமே என்ற நினைவினால் விம்மலை அடக்கப் பார்த்தாள். எவ்வளவு முயன்றும் அடக்க முடியவில்லை. குப்புறப் படுத்துக் கொண்டிருந்தால் இப்படித் தான் விம்மல் வந்து கொண்டிருக்கும்; எழுந்து பெட்டியை எடுத்துக்கொண்டு புறப்பட யத்தனித்தால்...

இந்தச் சமயத்தில் மச்சுப் படியில் யாரோ ஏறிவரும் காலடிச் சத்தம் கேட்டது. ஏதோ ஒரு விபரீதம் மாடி ஏறி வருகிறது என்று அவள் உள் உணர்வுக்குத் தோன்றி நெஞ்சு பதைபதைத்தது. அறையின் கதவு திறந்தது. வந்தவன் பட்டாபிராமன் தான் என்று மனதுக்குத் தெரிந்து விட்டது. ஐயோ! இவன் எதற்காக இங்கே, இந்த வேளையில் தனியாக வருகிறான்! தன்னைக் கொலை செய்வதற்கு வருகிறானா? இல்லையென்றால், தன்னுடைய ஆத்மாவைக் கொலை செய்வதற்காக வருகிறானா? இவனை எப்படித் திரும்பிப் போகச் செய்வது? குப்புறப் படுத்தவண்ணம் தூங்குவது போல் அசையாம லிருக்கலாம். தூங்குவதாக எண்ணிக் கொண்டு ஒரு வேளை திரும்பிப் போய்விட மாட்டானா?......

சீதாவின் ஆசை நிராசையாயிற்று. அவள் தூங்குகிறாள் என்று நினைத்துக் கொண்டு பட்டாபிராமன் திரும்பிப் போகவில்லை. உள்ளே வந்தான். அவள் அருகிலும் வந்தான். வந்து அவள் தோள்களைத் தொட்டு மெதுவான குரலில் "சீதா!" என்றான்.

சீதா துள்ளி எழுந்து அவன் கைகளை உதறித் தள்ளிவிட்டு உட்கார்ந்தாள்.

"பயப்படாதே. சீதா! நான்தான்!" என்றான் பட்டாபிராமன்.

பிறகு அவன் ஏதேதோ சொன்னான். சீதா கேட்டுக் கொண்டேயிருந்தாள். முதலில் அவளுக்கு ஒன்றும் விளங்கவில்லை. கொஞ்சம் கொஞ்சமாகப் புரிய ஆரம்பித்தது. ஆகா! அந்தப் பத்திரிகையிலே யாரோ எழுதியிருந்தது சரியாய்ப் போய் விட்டது! இவன் தன்னிடம் காதலை வெளியிடுகிறான். தனக்காக என்ன தியாகம் வேண்டுமானாலும் செய்கிறேன் என்கிறான். தனக்காக வீடு வாசலையும் சேர்மன் வேலையையும் விட்டுவிட்டு இலங்கைக்கோ ஆப்பிரிக்காவுக்கோ அந்தமானுக்கோ வரத் தயாரா யிருக்கிறானாம்! தன்னுடைய விம்மல் சத்தம் இவனுடைய இருதயத்தைப் பிளந்து விட்டதாம். இவனுடைய மனைவியும் மாமியாரும் செய்த அநீதிகளுக்கெல்லாம் பரிகாரம் செய்து விடுவானாம்! வாயைத் திறந்து 'சரி' என்று ஒரு வார்த்தை சொல்லி விட்டால் போதுமாம்! — கடவுளே! இவனுடைய மூளை இப்படியா பிசகிப் போக வேண்டும்? புருஷர்கள் எல்லாருமே இப்படித்தான் இருப்பார்களோ? இவனை எப்படி இங்கிருந்து அனுப்புவது? என்ன வார்த்தை சொன்னால் போவான்? இவனுடைய பேச்சுக் குரலைக் கேட்டு லலிதா எழுந்து வராம லிருக்க வேண்டுமே? வந்தால் எவ்வளவு அவமானமாயும் விபரீதமாயும் முடியும்? ஐயோ! இவன் எதற்காகத் தன் முகவாய்க் கட்டையைத் தொடுகிறான்? தொட்டுக் கொண்டு என்னமோ உளறுகிறானே?......

அறைக் கதவு மறுபடி திறந்தது. லலிதா வந்து வாசற்படியில் ரௌத்ரா

காரமாக நின்றாள். சீதாவுக்குச் சப்த நாடியும் ஒடுங்கிவிட்டது. கொஞ்ச நஞ்சமிருந்த சிந்தனை சக்தியும் போய் விட்டது. மனது ஒன்றையும் நினைக்க முடியவில்லை. உடம்பையும் அவளால் அசைக்க முடியவில்லை. ஆனால் காது தீக்ஷண்யமாயிருந்தது. நெருப்பைக் கக்கிக்கொண்டு வரும் அக்கினி அஸ்திரங்களைப்போல் லலிதா கூறிய கொடிய மொழிகள் காதில் விழுந்தன.

"அடி பாவி! சண்டாளி! இப்படியா எனக்குத் துரோகம் செய்தாய்? 'பாம்பை வீட்டிலே வைத்துப் பால் வார்க்கிறாயே?' என்று அம்மா சொன்னாளே? அவள் வாக்கு உண்மையாகி விட்டதே! உன்னை இதற்காகவா இங்கே அழைத்து வந்தேன்? என் குடியைக் கெடுத்துவிட்டாயே! அடி குலத்தைக் கெடுக்க வந்த கோடாரிக் காம்பே! அன்றைக்கு என்னைப் பெண் பார்க்க வந்தவனைக் குறுக்கே நின்று மறித்துக் கலியாணம் செய்து கொண்டாய். அதற்காக நான் சந்தோஷப் பட்டேன். அவனோடு வாழத் தெரியாமல் ஓடி வந்தாய். அப்படியும் எனக்குப் புத்தி வரவில்லை. உன்னை மறுபடியும் என் வீட்டுக்கு அழைத்து வந்து சீராட்டித் தாலாட்டினேன். என் கழுத்துக்கே கத்தி வைத்து விட்டாய்! நீ நன்றாயிருப்பாயா? ஆனால் உன்னைச் சொல்லி என்ன பிரயோஜனம்? இந்தப் பாவி இப்படிப் பட்ட கள்ளத்தனம் செய்யும் கிராதகனாயிருக்கும்போது நீ என்ன செய்வாய்? உன்னைச் சொல்லி உபயோகமில்லை. இந்தச் சண்டாளனைத் தேடி வந்து என்னைத் தள்ளினார்களே, அவர்களைச் சொல்ல வேண்டும்!......"

இத்தனை நேரமும் பேசமுடியாமல் திகைத்திருந்த பட்டாபிராமன் இப்போது துள்ளிப் பாய்ந்து, "லலிதா! வாயை மூடு! ஜாக்கிரதை!" என்றான்.

"என்னங்காணும் அதட்டுகிறீர்! செய்கிறதையும் செய்துவிட்டு இது வேறயா? எத்தனை நாளாக உம்முடைய லீலைகளை நடத்தி வருகிறீர்? அந்தப் பத்திரிகையில் எழுதியிருந்ததற்கு மட்டும் பொத்துக் கொண்டு வந்துவிட்டதே! நான் அந்தப் பத்திரிகையைத் தொட்டதற்காக ஆத்திரம் பொங்கி வந்ததே! அதில் எழுதியிருந்த தெல்லாம் உண்மைதானே! என் கைப்பட நானே அந்தப் பத்திரிகைக்குக் கடிதம் எழுதுகிறேன். இதோ தெரு வாசலுக்குச் சென்று கூச்சலிட்டு ஊரைக் கூட்டுகிறேன்!"

பட்டாபிராமனுக்கு ஒரு நொடியில் என்ன வெல்லாமோ பயங்கரமான எண்ணங்கள் உதித்து மறைந்தன.

"லலிதா! வாயை மூடுகிறாயா, இல்லையா? மூடாவிட்டால் இதோ உன்னைக் கொன்று விடுவேன்!" என்று சொல்லிக் கொண்டே அருகில் இரண்டு அடி எடுத்து வைத்தான்.

"கொன்று விடுங்கள்! பேஷாகக் கொன்று விடுங்கள்! உம்! ஏன் கொல்லாமல் சும்மா நிற்கிறேன்?" என்று லலிதா கூச்சலிட, பட்டாபிராமன் விகாரமான முகத் தோற்றத்துடன் கையைப் பயங்கரமாக ஆட்டிக் கொண்டு வந்து லலிதாவை நெருங்கி அவளுடைய கழுத்தில் கையை வைத்தான். கழுத்தில் அவன் கைபட்டதோ இல்லையோ, லலிதா, "ஐயோ! அம்மா! என்னைக் கொல்லுகிறார்களே! உன் மாப்பிள்ளையும் சீதாவும் சேர்ந்து என் மென்னியைப் பிடித்துக் கொல்லுகிறார்களே!" என்று பயங்கரமாய்க் கூவிக் கொண்டே கீழே தடால் என்று விழுந்தாள். அவளுடைய உதடுகளும் கை கால்களும் பயங்கரமாகவும் கோணல் மாணலாகவும் இழுத்தன. கண்கள் செருகிக் கறுப்பு விழி மறைந்து வெள்ளை விழி மட்டும் தெரிந்தது. வாயிலிருந்து நுரை வந்தது. தொண்டையிலிருந்து களகள வென்று ஒரு சத்தம் உண்டாகிப் பயங்கரத்தை அதிகப்படுத்தியது.

பட்டாபிராமன் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து தன் இரண்டு கைகளாலும் லலிதாவைத் தூக்கி எடுத்துக் கொண்டான். அச்சமயம் அவனுடைய மாமியார் குறுக்கே வந்து, "என் பெண்ணை ஒருவரும் தொடவேண்டாம். அவளைக் கீழே விடும்!" என்றாள்.

"ஏ மூதேவி! விலகிப்போ!" என்று சொல்லிக்கொண்டே மாமியாரை ஒரு இடி இடித்து அப்பாற்படுத்தி விட்டுப் பட்டாபிராமன் கீழே சென்றான். கட்டிலில் கொண்டு போய் லலிதாவைக் கிடத்தி அவள் முகத்தில் தண்ணீரை விசிறித் தெளித்துச் சிகிச்சை செய்யத் தொடங்கினான்.




★ ● ★

சம்பாரன் ஜில்லாவில் குடியானவர்களின் நிலைமையைப் பற்றி மகாத்மாவின் விசாரணை ஆரம்பமாயிற்று. குடியானவர்களிடம் அவர்களுடைய கஷ்டங்களைப்பற்றி வாக்குமூலங்கள் எடுக்கப்பட்டன. வாக்குமூலத்தில் உண்மையை அப்படியே சொல்ல வேண்டும் என்றும் கொஞ்சங்கூட மிகைப்படுத்தக் கூடாது என்றும் மகாத்மா வற்புறுத்தினார். ஒவ்வொரு குடியானவனும் வாக்குமூலம் கொடுத்ததும் அவனை நன்றாகக் குறுக்கு விசாரணை செய்தார்கள். குறுக்கு விசாரணையில் எந்த விஷயமாவது சந்தேகத்துக்கு இடம் என்று ஏற்பட்டால் அதைப் பதிவு செய்யாமல் தள்ளி விட்டார்கள்.

குடியானவர்கள் கூட்டம் கூட்டமாக வாக்குமூலம் கொடுக்க வந்தபடியால் ஏக காலத்தில் எழெட்டுப் பேர் வாக்குமூலம் பதிவு செய்ய வேண்டியதாயிருந்தது. இதற்கு மகாத்மாவுக்கு உதவி செய்வதற்காகப் பாபு பிரஜகிஷோர் பிரஸாத், ராஜேந்திர பிரஸாத் முதலிய பிரசித்தமான பீஹார் வக்கீல்கள் வந்திருந்தார்கள். அவர்கள் மகாத்மாவுடன் வசித்தபடியால் அவர்களுடைய வாழ்க்கை முறைகளைக் குறித்து மகாத்மா தம் அபிப்பிராயத்தைத் தெரிவிக்க நேர்ந்தது. ஒவ்வொரு வக்கீலும் ஒரு சமையற்காரனையும் ஒரு வேலைக்காரனையும் அழைத்து வந்திருந்தார்கள். இராத்திரி நடுநிசிக்குத்தான் போஜனம் அருந்துவார்கள். அவர்கள் தங்களுடைய செலவையெல்லாம் தாங்களே செய்துகொண்ட போதிலும் அவர்களுடைய ஆடம்பர வாழ்க்கை மகாத்மாவுக்குப் பிடிக்கவில்லை. நேசமுறையில் பரிகாசம் செய்து அவர்களைச் சீர்திருத்த முயன்றார். கடைசியாக அந்த வக்கீல்கள் தங்களுடைய தனித்தனி சமையல்காரர்களையும் வேலைக்காரர்களையும் அனுப்பி விட்டார்கள். மகாத்மாவுடன் தொண்டுசெய்த அனைவருக்கும் ஒரே சமையல் சாப்பாடு என்றும், எல்லாரும் ஒரே சமயத்தில் வந்து சாப்பிட வேண்டும் என்றும் ஏற்பட்டது. எல்லாருக்கும் பொதுவாக எளிய சைவ உணவு தயாரிக்கப்பட்டது.

இவ்வாறு அந்த ஆரம்ப நாட்களிலேயே காந்திமகான் தம்முடைய சகாக்களைக் கூடத் தியாக வாழ்க்கைக்குத் தயார் செய்யலானார்.

கிராமங்களுக்குச் சென்று கிராமவாசிகளின் நிலைமையை அறிய அறிய, அவர்களுக்குக் கல்வி அறிவு ஊட்டினால் அன்றி நிரந்தரமான முன்னேற்றம் ஏற்படாது என்று தெரியவந்தது. ஆகவே சம்பளத்துக்காகவன்றித் தொண்டு செய்தல் என்ற முறையில் கிராமப் பள்ளிக்கூடம் நடத்தக் கூடியவர்கள் தேவை என்று மகாத்மா விண்ணப்பம் விடுத்தார். இந்த வேண்டுகோளின் பேரில் தேசத்தின் பல பகுதிகளிலிருந்தும் தொண்டர்கள் வந்தார்கள். மகாத்மாவின் அந்தரங்கக் காரியதரிசியாயிருந்து அற்புதமான தொண்டுசெய்த ஸ்ரீ மகாதேவதேஸாய் இந்த நாளிலேதான் மகாத்மாவை வந்து அடைந்தார். சத்தியாக்கிரஹ ஆசிரமத்திலிருந்து ஸ்ரீமதி கஸ்தூரிபாய் காந்தியும் ஸ்ரீ தேவதாஸ் காந்தியும் இன்னும் சில தொண்டர்களும் வந்து சேர்ந்தார்கள்.

முதலில் பரீட்சார்த்தமாக ஆறு கிராமங்களில் ஆறு பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்தப்பட்டன. இந்தப் பள்ளிக்கூடங்களில் குழந்தைகளுக்கு எழுதவும் படிக்கவும் கணக்குப்-

போடவும் கற்றுக் கொடுப்பதைக் காட்டிலும் அவர்களுக்குத் தூய்மையும் நல்ல வழக்க பழக்கங்களும் கற்பித்தலே முக்கியமானதென்று காந்திஜி வற்புறுத்தினார்.

கிராமத் தொண்டுசெய்ய முன் வந்தவர்களில் பல பெண்மணிகளும் இருந்தார்கள். இவர்களில் ஸ்ரீமதி அவந்திகாபாய் கோகலே நடத்திய பள்ளிக்கூடம் மிகச் சிறந்த மாதிரிப் பள்ளிக்கூடமாக விளங்கிற்று.

பள்ளிக்கூடங்கள் நடந்த கிராமங்களிலும் அவற்றுக்குச் சுற்று வட்டாரங்களிலும் வேறு வகைப்பட்ட சமூகத் தொண்டுகளும் தொடங்கப்பட்டன.

கிராமவாசிகள் பொதுவாக அறியாமையில் மூழ்கியிருந்தார்கள். சுகாதாரம் சம்பந்தமாக அவர்களுடைய அறியாமை பயங்கரமாயிருந்தது. கிராமங்களின் வீதிகளும், சந்துகளும் குப்பை மயமாயிருந்தன. கிணறுகளைச் சுற்றிலும் சேறும் குப்பையுமாகக் கிடந்தன. ஆண்கள், பெண்கள், குழந்தைகள் எல்லாருமே சொறி சிரங்கு முதலிய சரும வியாதிகளினால் பீடிக்கப்பட்டிருந்தார்கள்.

எனவே, மகாத்மாவினால் பள்ளிக்கூடம் நடத்துவதுடன் திருப்தி அடைந்து இருக்க முடியவில்லை. வைத்திய உதவியும் சுகாதார முயற்சியும் தொடங்கவேண்டும் என்று விரும்பினார். இந்த வேலைக்குப் பொறுப்பு வகித்து நடத்த இந்திய ஊழியர் சங்கத்திலிருந்து ஓர் ஊழியரை அனுப்பவேண்டும் என்று எழுதிக் கேட்டார். அதன்படி டாக்டர் தேவ் என்பவர் வந்து சேர்ந்தார்.

கிராமவாசிகள் டாக்டரிடம் சிகிச்சை செய்துகொள்ள வந்தார்கள். ஆனால் சுகாதார விதிகளை அனுசரிப்பதில் அவர்கள் சிரத்தை கொள்ளவில்லை. வயலில் பாடுபட்டு உழைத்து வேலை செய்யும் தொழிலாளிகள் கூடத் தங்கள் வீட்டு அசுத்தத்தைத் தாங்கள் சுத்தப்படுத்த முன் வரவில்லை. எவ்வளவு சொன்னாலும் அவர்கள் கேட்கும் வழியாக இல்லை.

காந்தி மகான் இதனால் மனம் சோர்ந்து விடவில்லை. நாமே செய்து காட்டவேண்டும் என்று டாக்டர் தேவிடம் சொன்னார். அதன்பேரில் டாக்டர் தேவும் அவர் கீழ் வேலை செய்த தொண்டர்களும் ஒரு கிராமத்தைச் சுத்தம் செய்து காட்டுவது என்று தீர்மானித்தார்கள். தங்களுடைய சக்திகளை யெல்லாம் திரட்டி அந்த ஒரு கிராமத்தில் உபயோகப் படுத்தினார்கள். கிராமத்தைச் சென்று அடையும் சாலைப்புறங்களையும் வீடுகளின் வாசற்புறங்களையும் கூட்டிச் சுத்தம் செய்தார்கள். கிணறுகளிலிருந்து தூர் எடுத்துச் சுத்தப் படுத்தினார்கள். அழுக்குத் தண்ணீர் தேங்கியிருந்த பள்ளங்களைத் தூர்த்து மூடினார்கள். இதை யெல்லாம் பார்த்த பிறகு அந்தக் கிராமத்து ஜனங்கள் கொஞ்சம் வெட்கப்பட்டு ஊரைத் தாங்களே சுத்தம் செய்வதற்கு முன்வந்தார்கள். இந்த மாதிரி பல கிராமங்கள் சுத்தப்பட்டன. இத்தகைய தொண்டு நடந்து கொண்டிருந்த கிராமங்களுக்கு மகாத்மா அடிக்கடி சென்று பார்வையிட்டு வந்தார். அப்போது காந்திஜி அடைந்த ஓர் அநுபவத்தைப் பல பொதுக் கூட்டங்களில் பின்னால் சொல்லியிருக்கிறார். "சத்தியசோதனை" என்னும் தமது சுய சரிதத்திலும் குறிப்பிட்டிருக்கிறார். மனதை உருக்கும் அச் சம்பவம் வருமாறு :—

"பிதிஹார்வா என்னும் சிறு கிராமத்தில் எங்கள் பள்ளிக்கூடம் ஒன்றிருந்தது. அதற்கருகிலிருந்த மற்றொரு சிறு கிராமத்தைப் பார்க்க நான் சென்றிருந்தேன். அங்கே நான் கண்ட ஸ்திரீகளில் சிலர் மிகவும் அழுக்கான ஆடை தரித்திருந்தார்கள். அவர்கள் தங்கள் ஆடைகளை ஏன் துவைப்பதில்லை யென்று கேட்கும்படி கஸ்தூரிபாயிடம் சொன்னேன். அவன் அவ்வாறே அவர்களைப் பார்த்துக் கேட்டான். அப்போது அந்த ஸ்திரீகளில் ஒருத்தி கஸ்தூரிபாயைத் தன் குடிசைக்குள் அழைத்துச் சென்று கூறியதாவது :

'இங்கே பாருங்கள். வேறு ஆடைகள் வைத்திருக்கும் பெட்டி அல்லது அலமாரி ஏதாவது இவ்வீட்டில் இருக்கிறதா? நான் அணிந்திருக்கும் புடவை ஒன்றுதான் எனக்கு இருக்கிறது. அதை நான் எப்படித் துவைப்பேன்? மகாத்மாஜியிடம் சொல்லி இன்னொரு சேலை வாங்கித் தாருங்கள். அப்போது நான் தினந்தோறும் ஸ்நானம் செய்து சுத்தமான ஆடை அணிந்துகொள்வதாக வாக்குறுதி தருகிறேன்.'

இந் நிலைமை ஏதோ அபூர்வமானதென்று எண்ணவேண்டாம். இந்தியக் கிராமங்கள் பலவற்றிலும் உள்ள நிலைமைக்கு இது ஓர் உதாரணமே யல்லாது வேறில்லை. இந்தியாவில் கணக்கற்ற குடிசைகளில் ஜனங்கள் எவ்விதத் தட்டுமுட்டுச் சாமான்களுமின்றி, மாற்றிக் கட்டிக்கொள்ள இரண்டாவது துணியுமின்றி, மானத்தை மூட ஒரே கந்தையுடன் வாழ்கிறார்கள்."

சம்பாரன் கிராமங்களில் மகாத்மா அடைந்த மேற்கூறிய அநுபவந்தான் பின்னால் காந்திஜி இராட்டை இயக்கத்தை ஆரம்பிப்பதற்கும், கிராமவாசிகள் தங்கள் சுய தேவைகளைத் தாங்களே பூர்த்திசெய்து

தொலைய வேண்டும் என்னும் இயக்கத்தை நடத்துவதற்கும் மூலகாரணமாயிருந்தது.

• • •

குடியானவர்களிடம் வாக்குமூலம் வாங்கும் வேலை ஒரு பக்கம் தீவிரமாக நடந்து கொண்டிருந்தது. ஆயிரக்கணக்கான வாக்குமூலங்கள் பதிவாகிவிட்டன. வாக்குமூலங்கள் பதிவு செய்த இடத்தில் ஸி. ஐ. டி. போலீஸ்காரர்களும் இருப்பார்கள். அதை மகாத்மா ஆட்சேபிக்கவில்லை. ஸி. ஐ. டி. போலீஸார் இருக்கும்போதே வாக்குமூலம் கொடுக்கச் செய்தால்தான் குடியானவர்களுக்குத் தைரியம் உண்டாகும் என்று மகாத்மா கருதினார்.

வாக்குமூலங்களின் போக்கைத் தோட்ட முதலாளிகள் அறிந்தபோது அவர்களுடைய கோபம் அதிகமாயிற்று. மகாத்மாவின் விசாரணையைத் தடைப்படுத்தி நிறுத்துவதற்குப் பல முயற்சிகள் செய்தார்கள். மகாத்மாவின் கிராமத் தொண்டுக்கும் இடையூறு விளைவிக்கப் பார்த்தார்கள். மூங்கில் புல்லினால் கட்டியிருந்த ஒரு பள்ளிக்கூடக் குடிசைக்கு அவர்களுடைய தூண்டுதலினால் தீ வைக்கப்பட்டது. அதன் பலன் ஒரு விதத்தில் நல்லதே ஆயிற்று. தொண்டர்கள் மூங்கில் புல் குடிசை இருந்த இடத்தில் பள்ளிக்கூடத்துக்காகச் செங்கல் கட்டிடம் கட்டி விட்டார்கள்!

பிறகு ஒரு நாள் பீஹார் சர்க்காரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. "உங்களுடைய விசாரணை நீண்டு கொண்டே போகிறதே! சீக்கிரம் முடித்துக் கொண்டு பீஹாரை விட்டுப் போனால் நன்றாயிருக்கும்!" என்பது அக் கடிதத்தின் சாராம்சம்.

"விசாரணை சீக்கிரம் முடிவதற்கில்லை. இரண்டில் ஒன்று செய்து அரசாங்கம் என்னுடைய விசாரணையை நிறுத்திவிடலாம். ஒன்று, குடியானவர்களின் குறைகள் உண்மை என்று ஒப்புக் கொண்டு அவற்றை நிவர்த்திக்க ஏற்பாடு செய்யலாம். அல்லது, உத்தியோக முறையில் சர்க்காரே குடியானவர்களின் குறைகளை விசாரித்து முடிவு செய்ய ஒரு கமிட்டி நியமிக்கலாம். இந்த இரண்டில் ஒன்று செய்தால் என்னுடைய விசாரணையை நிறுத்திக் கொள்கிறேன்" என்று மகாத்மா பதில் எழுதினார்.

அப்போது பீஹாரின் லெப்டினண்ட் கவர்னராயிருந்தவர் ஸர் எட்வர்ட் கேட் என்னும் நல்ல ஆங்கிலேயர். தம்மை வந்து பார்க்கும்படியாக மகாத்மா காந்திக்கு அவர் கடிதம் எழுதினார். அதன்பேரில் காந்திஜி கவர்னரைப் போய்ப் பார்த்தார்.

"தங்கள் விருப்பத்தின்படியே சம்பாரன் குடியானவர்களின் குறைகளை விசாரித்து நிவர்த்திப்பதற்கு ஒரு கமிட்டி நியமிக்கப் போகிறேன். அந்தக் கமிட்டியில் தாங்களும் அங்கத்தினராயிருக்க வேண்டும்" என்று சொன்னார் ஸர் எட்வர்ட் கேட்.

"கமிட்டியில் அங்கத்தினன் ஆனால் குடியானவர்களின் கட்சி பேசும் உரிமை எனக்கு இல்லாமற் போய்விடக்கூடாது. கமிட்டியின் முடிவு திருப்திகரமாயில்லாவிட்டால் குடியானவர்களுக்கு யோசனை சொல்லி நடத்தும் உரிமையும் எனக்கு இல்லாமற் போய்விடக் கூடாது. அப்படியானால், நான் கமிட்டியில் இருக்க ஒப்புக் கொள்கிறேன்" என்றார் காந்திஜி.

இந்த நிபந்தனைகளை ஸர் எட்வர்ட் கேட் ஒப்புக் கொண்டார். ஸர் பிராங்க் ஸ்லை என்னும் ஆங்கிலேயர் தலைமையில் சர்க்கார் கமிட்டி நியமிக்கப்பட்டது. அதில் மகாத்மாவும் அங்கத்தினரானார். உத்தியோக முறையில் விசாரணை நடந்தது. குடியானவர்களின் குறைகள் எல்லாம் உண்மையானவையே என்று கமிட்டியார் கண்டார்கள். அநீதிகளை ஒழிப்பதற்குரிய சிபார்சுகளும் செய்தார்கள். அந்தச் சிபார்சுகளை அனுசரித்துச் சீக்கிரத்திலேயே சட்டம் ஏற்பட்டது. நூறு வருஷகாலமாக அந்தப் பிரதேசத்தில் அமுலில் இருந்துவந்த "தின் கதியா" முறை ஒழிந்தது. இத்துடன் சம்பாரன் ஜில்லாவில் தோட்டக்கார முதலாளிகளின் ராஜ்யமும் முடிவுற்றது.

# கவர்ன்மெண்ட் ஆப் இந்தியா

## தாழ்த்தப்பட்ட வகுப்பு மற்றும் இதர முன்னேற்ற மடையாத வகுப்பு மாணவர்களுக்கான

# ஸ்காலர்ஷிப்

## 1949 - 50

1949–50க்கு ஸ்காலர்ஷிப் வழங்க இந்திய அரசாங்கத்தாரால் தாழ்த்தப்பட்ட வகுப்பு, பழங்குடி மக்கள், மலே ஜாதியினர் மற்றும் இதர முன்னேற்ற மடையாத வகுப்பு மாணவர்களிடமிருந்து அதற்கென குறிப்பிட்ட அப்ளிகேஷன் பாரத்தில் விண்ணப்பங்கள் கோரப்படுகின்றன. கீழே குறிப்பிட்டுள்ள வரிசைப்படி இந்தியாவில் அங்கீகரிக்கப்பட்டு மெட்ரிக்குலேஷன் பரீக்ஷைக்குமேல் கல்வி போதிக்கும் எந்த கலாசாலையிலும் இந்த ஸ்காலர்ஷிப் சலுகையை உபயோகப்படுத்திக் கொள்ளலாம்.

1. மருந்து மற்றும் நர்ஸிங் உள்பட இதர வைத்திய பாடங்கள்.
2. எஞ்ஜினீரிங், கட்டிடக் கலே.
3. வனவளர்ப்பு உள்பட விவசாயம் மற்றும் மிருக வைத்தியம்.
4. டெக்னுலஜி.
5. விஞ்ஞானம்.
6. கல்வி, சமூக சேவை.
7. வர்த்தகம்.
8. சட்டம்.
9. கலே, சமுதாய விஞ்ஞானம், உயர்தரக் கலேகள் மற்றும் நூல்நிலேயப் பாதுகாப்பு.

1948-49ம் வருஷத்துக்கு ஸ்காலர்ஷிப் பெற்ற மாணவர்கள் 1949-50 வருஷத்துக்கும் புதுப்பிக்க விரும்பினுல் அதற்கான பாரத்தில் மனுச்செய்து புதுப்பித்துக்கொள்ள வேண்டும். ஏற்கெனவே சென்ற வருஷம் மனுச்செய்து தேர்ந்தெடுக்கப்படாத மாணவர்கள் இந்த வருஷத்து ஸ்காலர்ஷிப் பெற விரும்பினுல் மீண்டும் புதிதாக விண்ணப்பித்துக்கொள்ள வேண்டும்.

விண்ணப்ப பாரங்களும், மற்றும் ஸ்காலர்ஷிப் வழங்குவதற்கான சட்ட திட்டங்களும், இலவசமாக கீழ்க்கண்டவரிடம் கிடைக்கும் :—

செக்ரடரி, (தாழ்த்தப்பட்ட வகுப்பு மற்றும் முன்னேற்ற மடையாத ஜாதிகளுக்கான ஸ்காலர்ஷிப் போர்டு) கல்விஸ்தாபன இலாகா, புது டெல்லி-3.

மனுக்கள் ஏற்றுக் கொள்ளப்படும் கடைசி தேதி 31–7–1949. தங்கள் சொந்த நன்மையை உத்தேசித்து மனுச் செய்து கொள்பவர்கள் வெகு சீக்கிரமாகத் தங்கள் விண்ணப்பங்களே அனுப்பக் கோரப்படுகிருர்கள். ஜுலே 31–7–1949-க்குள் எப்படியும் மனுக்கள் அனுப்பப்படல் வேண்டும்.

A. C. 32

# புது அடிமை

விந்தன்



மனிதனது ஆசைக் கனவில் உதித்த அதிசய உலகிலே—பசி, பிணி, மூப்பு, சாக்காடு ஆகியவை யற்ற ஆனந்த வாழுலகிலே—சயசிரம ஜீவிகள் இருவர் ஒரு நாள் சந்தித்தனர். அவர்களில் ஒருவன் நீக்ரோ; இன்னொருவன் இந்தியன்.

நீக்ரோவின் தோற்றத்தைப் பார்த்ததும், "நீ எந்தத் தேசத்தைச் சேர்ந்தவன், ஐயா?" என்று இந்தியனுக்குக் கேட்கத் தோன்றிற்று; கேட்டான்.

நீக்ரோ அதிசயத்துடன் அவனை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, "நல்ல வேளை! எடுத்ததும் 'நீ கறுப்பனா?' என்று கேட்காமல், 'எந்தத் தேசத்தைச் சேர்ந்தவன்?' என்று கேட்டாயே!—ரொம்ப சந்தோஷம்!" என்றான்.

"ஏன், என்ன?" என்று ஒன்றும் புரியாமல் கேட்டான் இந்தியன்.

"அதை ஏன் கேட்கிறாய், அப்பனே! அமெரிக்காவில் என்னைப் போன்றவர்களைக் கண்டதும், 'நீ கறுப்பனா?' என்றுதான் முதலில் கேட்பார்கள். ஏன் தெரியுமா? என் தோல் கறுப்பாம்; அவன் தோல் வெளுப்பாம்!" என்றான் நீக்ரோ.

"ஓஹோ! நீ அமெரிக்காவைச் சேர்ந்தவனா?—அப்படியானால் சரிதான்; எங்கள் தேசத்தில் சனாதனிகள் ஜாதித் திமிர் பிடித்து அலைவதுபோல உங்கள் தேசத்தில் வெள்ளையர்கள் நிறத் திமிர் பிடித்து அலைகிறார்கள் என்று நானும் கேள்விப்பட்டிருக்கிறேன்" என்றான் இந்தியன்.

"எனக்குத் தேசம் என்று ஒன்று கேடா!—என்னை ஆப்பிரிக்கா தேசத்தைச் சேர்ந்தவன் என்று சொல்வார்கள்; ஆனால் நான் இருந்ததெல்லாம் அமெரிக்காவில் தான்!" என்றான் நீக்ரோ.

"நீ இங்கே வந்து எத்தனை நாட்களாகியிருக்குமோ?"

"நாட்களா! எத்தனையோ வருஷங்களாகி விட்டன!"

"ஆமாம், பூலோகத்தில் நீ என்ன வேலை செய்து கொண்டிருந்தாய்?"

வேலையைப் பற்றிக் கேட்டதும் நீக்ரோ ஏனோ ஒரு நீண்ட பெருமூச்சு விட்டான். பிறகு, "இன்ன வேலை என்று சொல்வதற்கில்லை, அப்பனே! எல்லா வேலையும் செய்து கொண்டிருந்தேன்!" என்றான் துக்கம் தோய்ந்த குரலில்.

"எல்லா வேலையும் என்றால்......?"

"இது என்ன கேள்வி! அடிமைக்கு நேர வேலை என்று உண்டா, என்ன!

அடிமை!

இந்த வார்த்தையைக் கேட்டதும் இந்திய னுக்குத் தூக்கிவாரிப் போட்டது. "என்ன! அமெரிக்காவில் கூடவா அடிமைகள் இருக் கிறார்கள்!" என்றான் அவன் வியப்புடன்.

அவனுடைய வியப்புக்குக் காரணம் இல்லாமற் போகவில்லை. அமெரிக்கா ஒரு 'சுபேர நாடு' என்று அவன் கேள்விப்பட் டிருந்தான். சுபேர நாடுகளில்தான் 'அடி மைகள்' அதிகமா யிருப்பார்கள் என்னும் உண்மையை அவன் அறிந்திருக்கவில்லை!

இந்தியனின் அறியாமையைக் கண்டு நீக்ரோ சிரித்தான். பிறகு, "உன்னுடைய தேசம் எது?" என்று அவன் இந்தியனைத் திருப்பிக் கேட்டான்.

"என், இந்தியா தேசம்!"

"உனக்கு அங்கே என்ன வேலையோ?"

நீக்ரோ இவ்வாறு கேட்டதும் இந்திய னுக்கும் தர்மசங்கடமாகப் போய்விட்டது. "நானும் உன்னைப் போல்தான்...!" என்று அவன் மென்று விழுங்கிக் கொண்டே ஆரம்பித்தான்.

"என்னைப் போல்தான் என்றால்......?"

"அதுதான், அடிமையைப் போல!" என்றான் இந்தியன்.

"என்ன! இந்தியாவில்கூடவா அடிமைகள் இருக்கிறார்கள்!" என்று நீக்ரோ ஆச்சரி யத்துடன் கேட்டான்.

ஏனெனில் இந்தியா 'புண்ணிய பூமி' என்றும், அங்கே 'பாவி'களே கிடையா தென்றும் அவன் கேள்விப்பட்டிருந்தான். அப்படிப்பட்ட இடத்திலும் 'அடிமைகள்' இருக்கிறார்கள் என்று விஷயம் அவனுக்கு முற்றிலும் புதிதா யிருந்தது!

நீக்ரோவின் அறியாமையைக் கண்டதும் இந்தியனுக்கும் சிரிப்பு பொத்துக்கொண்டு வந்தது. அவன் வாய்விட்டுச் சிரித்துக் கொண்டே, "நம்மைப்போன்ற அடிமைகள் இல்லாத இடமே இந்த உலகத்தில் கிடை யாது போலிருக்கிறது!" என்றான்.

"ஆமாம் அப்பனே, ஆமாம்! உலகம் பூராவும் அடிமைகள் எங்கும், எப்பொழு தும் இருக்கத்தான் இருப்பார்கள். இந்த அரசியல் வாதிகள் இருக்கிறார்களே, அவர் களுக்கு வேலை கிடையாது. அந்தப் புண்ணிய வான்கள் அவர்களுடைய அடிமைத்தனத் தின்மேல் அவ்வப்பொழுது சுதந்திரம், ஜனநாயகம் போன்ற அழகான வர்ணங் களைப் பூசி ஜாலவித்தை செய்து காட்டிக் கொண்டிருப்பார்கள். அதைப் பார்த்துக் கை தட்டி ஆரவாரம் செய்வதற்கும் நாலு வீணர்கள் தயாரா யிருப்பார்கள். ஆனால் எங்களைப் போன்ற அடிமைகள் — ஈன ஜன் மங்கள் மட்டும் எங்குமே, எப்பொழுதுமே இருக்க முடியாது!" என்றான் நீக்ரோ.

அவனுடைய குரலில் ஆத்திரத்தோடு துக்கமும் கலந்திருந்தது. பாவம், தனக்கும் கீழான அடிமை ஒருவன் இந்த உலகத்திலே இருப்பான் என்று அவன் கொஞ்சமும் அப்போது எதிர்பார்க்கவில்லை!

இந்தியன் ஒருமுறை லேசாகக் கனைத்துத் தன்னுடைய தொண்டையைச் சரிப்படுத்திக் கொண்டு, "உங்களுடைய அடிமைத்தனத் தில் மட்டும் அப்படி என்ன விசேஷம், ஐயா?" என்று மீண்டும் பேச்சை ஆரம் பித்து வைத்தான்.

"விசேஷமா! ஒரு காலத்தில் பணம் படைத்த பாதகர்கள் ஆடு மாடுகள் போல எங்களைச் சந்தையில் விலை கொடுத்து வாங்கிக் கொண்டிருந்தார்கள் ஐயா, விலை கொடுத்து வாங்கிக் கொண்டிருந்தார்கள்!" என்று நீக்ரோ பொங்கி வந்த கோபத்தில் கத்தினான்.

இந்தியன் அலட்சியமாக, "பூ! இவ்வளவு தானா! எங்களுடைய தேசத்தில் எங்களை யெல்லாம் விலை கொடுக்காமலே வாங்கு



உபாத்தியாயர்:—பையன்களே, பரீட்சைக்கு இன்னும் இரண்டு வாரங்கள்தான் இருக்கின்றன. கேள்வித் தாள்களை யெல்லாம் அச்சடிக்கக் கொடுத்தாகி விட்டது. உங்களுக்கு ஏதாவது சந்தேக மிருந்தால், கேட்டுக் கொள்ளுங்கள்!

ஒரு பையன்:—கேள்வித் தாள்களை எந்த அச்சாபீஸில் கொடுத்திருக்கிறது, சார்?

லார்களே!" என்று சொல்லி, அவனைத் திணறவடித்தான்.

நீக்ரோவின் தலையில் இடி விழுந்தது போலிருந்தது. அவன் "என்ன!" என்று அதிர்ச்சியின் மிகுதியால் நடுக்கும் குரலில் கேட்டுவிட்டு வாயைப் பிளந்தான்.

"ஆமாம், பெரிய பெரிய பண்ணையார்களிடம் நாங்கள் பரம்பரை பரம்பரையாகவே அடிமைகளா யிருப்போம். எங்கள் தாத்தா அடிமையா?—என்னுடைய அப்பா அடிமை; அப்பா அடிமையா?—நானும் அடிமை; நான் அடிமையா?—என்னுடைய மகன் அடிமை; மகன் அடிமையா?—என்னுடைய பேரனும் அடிமை! — இந்த ரீதியில் எங்களுடைய வாழ்நாட்கள் சென்று கொண்டிருக்கும். ஆனால் 'அடிமை' என்ற வார்த்தைக்கு எங்கள் நாட்டில் பலவித அர்த்தங்களுண்டு; அவற்றைக் கண்டு நாங்கள் சிரிப்பது முண்டு. எது எப்படி யிருந்தாலும் என்னைப் போன்றவர்களுக்கு அங்கே விலையும் கிடையாது, இலையும் கிடையாது!" என்றான் இந்தியன்.

இந்த இடத்தில் நீக்ரோவுக்கு ஒரு சந்தேகம் தோன்றிற்று. அந்தச் சந்தேகத்தை நிவர்த்தி செய்து கொள்வதற்காக, "ஆமாம், உங்களைத் தேடிக்கொண்டு அவர்கள் வருவார்களா, அவர்களைத் தேடிக் கொண்டு நீங்கள் போவீர்களா?" என்று அவன் கேட்டான்.

"அழகுதான்! எங்களைத் தேடிக்கொண்டு அவர்கள் ஏன் வருகிறார்கள்? நாங்கள் தான் வெல்லத் துண்டைக் கண்ட ஈக்கள் போல அவர்களைத் தேடிச் சென்று மொய்த்துக் கொள்வோம்!" என்றான் இந்தியன்.

"நல்ல வேளை! நாங்கள் அவர்களைத் தேடிக் கொண்டு செல்வதில்லை; அவர்கள் தான் எங்களைத் தேடிக் கொண்டு வருவார்கள்!" என்றான் நீக்ரோ.

இந்தியன் "பரவாயில்லையே!" என்று சொல்லி, நீக்ரோவின் முதுகில் ஒரு 'ஷொட்டு'க் கொடுத்துத் தன்னுடைய மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டான்.

"பரவாயில்லையா! எங்களுக்குக் கிடைத்ததுபோல் அடியும் உதையும் உங்களுக்குக் கிடைத்திரா தல்லவா?" என்று கேட்டுவிட்டு, நீக்ரோ தழும்புகள் நிறைந்த தன் முதுகை இந்தியனுக்குக் காட்டினான்.

"வெட்கக்கேடுதான்! அடியும் உதையும் எங்களுக்கு மட்டும் கிடைக்காமல் இருக்குமா, என்ன?— ஏதாவது ஒரு சிறு தவறு செய்தால் போதும்; மரத்தோடு மரமாக எங்களைச் சேர்த்துக் கட்டி 'வெளு, வெளு' என்று வெளுத்து விடுவார்கள். உனக்கு ஒரு கதை தெரியுமா? — எங்களுடைய வம்சத்தில் நந்தன் என்று ஒருவன் இருந்தானாம். அவனுக்கு ஒரு பைத்தியம்— அதாவது, பகவான் மீது பைத்தியம். அந்தப் பைத்தியத்தின் காரணமாக அவன் பண்ணையார் இட்ட வேலையைச் சரியாகச் செய்ய மாட்டானாம். அதனால் அடிக்கடி அவன் பண்ணையாரிடம் அடி பட நேர்ந்தது. அப்படி அடி பட நேரும்போதெல்லாம் அந்த அப்பாவி என்ன சொல்வானாம், தெரியுமா? —'ஐயோ! என்னை அடிப்பதால் உங்களுடைய கை வலிக்குமே, ஆண்டே!' என்று சொல்லிக் கதறுவானாம்!—அந்தக் காலத்து நந்தனார் இப்படி யென்றால் இந்தக் காலத்து நந்தனார்கள் எப்படி என்கிறாய்?—'சும்மா அடியுங்க, சாமி! நல்லா அடியுங்க! உங்க உப்பைத் திங்கிறேன், உங்க துணியைக் கட்டறேன்—நீங்க அடிக்காம வேறே யாரு சாமி அடிக்கிறது?' என்று சொல்லித் தங்கள் முதுகை முதலாளிகளுக்குத் திருப்பித் திருப்பிக் காட்டுகிறார்கள்! — எப்படி யிருக்கிறது, கதை?"

"கதை நன்றாய்த்தான் இருக்கிறது! ஆனால் இதுகூட எனக்குத் தேவலை என்று தான் படுகிறது; ஏனெனில், இதைவிட மோசமான சோதனைகளுக்கெல்லாம் ஒரு காலத்தில் நாங்கள் ஆளாகி யிருக்கிறோம்......"

"அப்படி என்ன சோதனைகள், ஐயா?"



மானேஜர் (இங்கிப் புட்டி கவிழ்ந்ததும்):—ஆ! நேரா! நேரா! அடடா!

சேவகன்:—போகுது போகிறது, எஜமான்! ரொம்ப வருத்தப்படாதீங்க; நம்ம ஆபீஸ் தான் வேண்டிய இங்கி இருக்கிறதே!

"சில சமயம் எங்களுடைய எஜமானர்களுக்குப் பொழுது போகாது; ஏதாவது வேடிக்கை பார்க்க வேண்டுமென்று தோன்றும். அப்பொழுதெல்லாம் அவர்கள் என்ன செய்வார்கள் தெரியுமா?—சிங்கம், புலி முதலிய பயங்கரக் காட்டு மிருகங்களோடு எங்களைச் சண்டையிட வைத்து



வேடிக்கை பார்ப்பார்கள்—அதுவும் எப்படி? கூண்டிலிருக்கும் சிங்கத்துக்கோ, புலிக்கோ இரண்டு மூன்று நாட்கள் அன்ன ஆகாரம் எதுவும் கொடுக்காமல் பட்டினி போட்டு வைத்திருப்பார்கள்......"

"ஏன், அப்பொழுதுதான் நீங்கள் அதனுடன் சண்டையிட்டு ஜயிக்க முடியும் என்றா......?"

"ஜயிக்கவாவது, ஜெயிக்கவாவது! பசி எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாயிருக்கிறதோ, அவ்வளவுக் கவ்வளவு சீக்கிரத்தில் அது எங்களை வேலை தீர்த்துவிடும் என்றுதான்!"

"நிஜமாகவா!"

"ஆமாம், அப்பனே! நாங்கள் அதற்குத் தயாராக இருக்கவில்லையென்றால் எஜமானர்களே எங்களை வேலை தீர்த்து விடுவார்கள்!—சொல்லப் போனால் நாங்களும் அதைப் பற்றிக் கவலைப்படுவதில்லை; 'எவ்வளவுக் கெவ்வளவு சீக்கிரம் அந்த மனித அரக்கர்களிடமிருந்து விடுதலை கிடைக்கிறதோ, அவ்வளவுக் கவ்வளவு நல்லது' என்று எண்ணி, இந்த ஜன்மத்தை உயிரோடு மறந்து விடுவோம்!"

இந்தக் கதையைக் கேட்டதும் இந்தியன் ஒரு பெருமூச்சு விட்டுவிட்டு, "இதேமாதிரி எங்களுடைய முதலாளிகளும் எங்களைச் சண்டையிட வைப்பதுண்டு. ஆனால் மிருகங்களோடு அல்ல; மனிதர்களோடு......!" என்று சொல்லித் தன் கதையை ஆரம்பித்தான்.

"என்ன! உங்கள் தேசத்தில் மனிதர்களோடு மனிதர்களா சண்டையிடுவீர்கள்!" என்று நீக்ரோ வியப்புடன் கேட்டான்.

"ஆமாம், வேலையில்லாதவர்களோடு வேலையிருப்பவர்கள் சண்டையிடச் செய்து எங்கள் முதலாளிகள் வேடிக்கை பார்ப்பதுண்டு!"

"ஓஹோ! அது எப்படி?"

"லாபத்தில் நஷ்டம் வரும் என்று தோன்றும் போதெல்லாம் அவர்கள் எங்களுடைய கூலியைக் குறைக்கப் பார்ப்பார்கள்; அல்லது, எங்களில் சிலரை வேலையிலிருந்து நீக்கப் பார்ப்பார்கள். இந்த அக்கிரமத்தை எதிர்த்து நாங்கள் வேலை நிறுத்தம் செய்வோம். அந்தச் சமயத்தில் வேலையில்லாதவர்களை முதலாளிகள் எங்களுக்குப் போட்டியாக வேலைக்கு அமர்த்திக் கொள்ள முயற்சி செய்வார்கள். அவர்களும் 'சும்மா இருப்பதற்குக் கிடைத்தவரை கிடைக்கட்டுமே' என்று வேலை செய்ய வருவார்கள். நாங்கள் அந்தக் கருங்காலிகளைப் பார்த்துக்கொண்டு சும்மா இருக்க முடியுமா?—எங்களுக்கும் பசி; அவர்களுக்கும் பசி!—பசியோடு பசி மோத வேண்டியதுதானே?—சண்டை பிரமாதமாக நடக்கும்; முதலாளிகளின் பாடு குஷிதான்!"

"என்ன சொன்னாய்! பசியா!" என்று நீக்ரோ அதுவரை கேள்விப்படாத ஒரு விஷயத்தைக் கேள்விப் பட்டவன்போல் துள்ளியெழுந்து நின்று கேட்டான்.

"ஆமாம், பசிதான்!" என்றான் இந்தியன்.

"அதைப் பற்றி நீ கவலைப்பட்டதுண்டா, என்ன?"

"நல்ல கேள்வி கேட்டாய், ஐயா! அந்தப் பாழும் பசியைப் பற்றித்தானே என்னைப் போன்றவர்களுக்கு அல்லும் பகலும் அங்கே கவலை!" என்றான் இந்தியன்.

"நிஜமாகவா சொல்கிறாய்?"

"பின் பொய்யா சொல்கிறேன்?"

"எனக்கென்னமோ இது வேடிக்கையாய்த்தான் இருக்கிறது! பூலோகத்திலே வேறு எத்தனையோ விஷயங்களைப் பற்றி











நான் கவலைப்பட்டிருக்கிறேன். ஆனால் இந்தப் பசியைப் பற்றி மட்டும் என்னுடைய வாழ்நாட்களில் நான் ஒருநாளும் கவலைப் பட்டதே கிடையாது. ஏனெனில், சாகும் வரை என்னுடைய எஜமான் எனக்குச் சோறு போட்டுவிடுவார் என்ற நம்பிக்கை எனக்கு இருந்தது. அந்த நம்பிக்கை என்னைப் போன்ற அடிமைகள் விஷயத்தில் கடைசிவரை வீணானதும் இல்லை!" என்றான் நீக்ரோ பெருமையுடன்.

இப்பொழுதுதான் தனக்கும் மேலான அடிமை ஒருவன் இந்தப் பரந்த உலகத்திலே உண்டு என்ற மகத்தான உண்மை அந்த நீக்ரோவுக்குப் புலப்பட்டது!

"தேவலையே! அப்படியானால் நீ பழைய அடிமை!" என்றான் இந்தியன்.

"நமக்குள்ளேயே வித்தியாசமா! நீ மட்டும் என்ன அடிமை?" என்று நீக்ரோ சிரித்துக்கொண்டே கேட்டான்.

"புது அடிமை!"

"பழைய அடிமையாவது, புது அடிமையாவது! அந்தக் காலமெல்லாம் மலையேறி விட்டது!" என்றான் நீக்ரோ.

"மலை ஏறவில்லை; ஏறப் பார்க்கிறது! ஏனெனில் உனக்கு இருந்த அந்தச் 'சோற்று நம்பிக்கை' எனக்கு இல்லவே இல்லையே! என்னுடைய எஜமான் உழைப்பதற்கு உடம்பில் தெம்பு இருக்கும் வரைதானே எனக்குச் சோறு போட்டு வந்தார்? அப்புறம் காலை வாரி விட்டு விட்டாரே—சுளையைத் தின்றதும் தோலைக் குப்பையில் வீசி எறிந்து விடுவதுபோல!" என்றான் இந்தியன்.

நீக்ரோ ஒரு கணம் யோசித்துவிட்டு, "ஓஹோ! அப்படியானால் நீ புது அடிமை தான்!" என்று அவன் சொன்னதை ஆமோதித்தான்.

சொல்லி ஒரு நிமிஷம்கூட ஆகவில்லை; அதற்குள் என்ன நினைத்துக் கொண்டானோ என்னமோ, அவன் கண்களில் நீர் மல்க, "இந்த அநியாயம் அக்கிரமங்களையெல்லாம் தொலைப்பதற்கு அமெரிக்காவில் ஆப்பிரகாம் லிங்கன் என்று ஒருவர் பிறந்தார். அவருடைய வேலை முடிவதற்குள் ஒரு பாவி அவரை ஈவிரக்கமின்றிச் சுட்டுக் கொன்று விட்டான்!" என்றான்.

"உங்களுடைய விமோசனத்துக்கு மட்டுமா?—உலகத்திலுள்ள அடிமைகள் அத்தனை பேருடைய விமோசனத்துக்காகவும் எங்கள் நாட்டில் காந்தி மகாத்மா என்று ஒருவர் அவதரித்தார். அந்த மகானையும் அப்படித்தான் ஒரு காதகன் சுட்டுக் கொன்றுவிட்டான்!" என்று சொல்லி, இந்தியனும் பெருகி வந்த கண்ணீரைத் துடைத்து விட்டுக் கொண்டான்.

அதே சமயத்தில் மகாத்மா காந்தியும் ஆப்பிரகாம் லிங்கனும் ஏதோ பேசிக் கொண்டே அந்தப் பக்கமாக வந்தனர். அவ்வளவுதான்; இருவரும் ஓடோடியும் சென்று அந்தப் புண்ணிய புருஷர்களுக்கு முன்னால் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்தனர்.

அடுத்த நிமிஷம் அந்தத் தீன கருணாகரர்களின் அரவணைப்பிலே, இருவரும் தங்கள் துயரத்தை ஒருகணம் மறந்து, ஆனந்தக் கண்ணீர் வடித்து நின்றனர்.

# "ஒன்றுமில்லை; சும்மா....!"

பகீரதன்

ஞாயிற்றுக்கிழமை; பொழுதே போக வில்லை. சும்மா ...... இப்படி ...... சினிமா பார்த்துவிட்டு வரலாம் என்று நினைத்து நிலைக் கண்ணாடிக்கு முன்னால் நின்று தலை வாரிக் கொண்டிருந்தேன். ஒரு புது உருவம் கண்ணாடியில் தெரிந்தது; திரும்பிப் பார்த்தேன். என்னுடைய பழைய நண்பர் ஒருவர் சிரித்துக்கொண்டே எனக்கு எதிரில் வந்து நின்றார்.

"என்ன, ஸார்! 'ஜம்'மென்று டிரஸ் பண்ணிக்கொண்டு எங்கே கிளம்புகிறீர்கள்?" என்று கேட்டார் அவர்.

"ஒன்றுமில்லை, சும்மா......இப்படி...... சினிமா பார்த்துவிட்டு வரலாம் என்று கிளம்பிக் கொண்டிருக்கிறேன்" என்றேன்.

நான் சொன்னதில் அவர் என்ன ஹாஸ்யச் சுவையைக் கண்டாரோ, தெரியவில்லை. 'ஹஹ்ஹஹ்ஹஹ்ஹா!' என்று சிரிக்க ஆரம்பித்து விட்டார்.

"என் ஐயா, இப்படிச் சிரிக்கிறீர்?" என்று கேட்டேன்.

"சினிமாவுக்குத்தான் கிளம்புகிறீரே! அப்புறம் என்ன, ஒன்றுமில்லை; சும்மா...?"

"ஆகா! பெரிய குற்றத்தைக் கண்டு பிடித்து விட்டீர்! புத்திசாலிதான்; நீர் எங்கே வந்தீர்?" என்று கேட்டேன்.

"ஒன்றுமில்லை; சும்மா ...... உம்மைப் பார்த்துவிட்டுப் போகலாம் என்றுதான் வந்தேன்" என்றார்!

"சரி, சும்மாத்தானே வந்தீர்? அப்படியானால் நான் போய் வருகிறேன்!" என்று திரும்பினேன்.

"வேறு ஒன்றுமில்லை, ஒரு அவசர காரியமாக......" என்று இழுத்தார் நண்பர்.

"அவசர காரியத்துக்கு 'ஒன்றுமில்லை; சும்மா...' என்றெல்லாம் ஏன் இழுக்கிறீர்? விஷயத்தைச் சொல்லுமே?"

"ஒன்றுமில்லை; ஒரு பத்து ரூபாய் இருந்தால் கொடும். முதல் தேதியன்று கொடுத்து விடுகிறேன்" என்றார்.

"பத்து ரூபாய் வேண்டும் என்பது ஒன்றுமில்லாத விஷயமோ?" என்று ஒரு போடு போட்டுவிட்டு, அவரிடம் பணத்தைக் கொடுத்து அனுப்பிவைத்தேன்.

★

நண்பர் போன சிறிது நேரத்துக்கெல்லாம் எதிர்வீட்டு வாத்தியார் நண்பர் என் வீட்டிலிருந்து வாங்கிக்கொண்டுபோன தினப் பத்திரிகையைக் கொண்டுவந்து என்னிடம் கொடுத்துவிட்டு, "இவ்வளவு நேரம் தாங்கள் பொறுமையுடன் இருந்தது பற்றிச் சந்தோஷம். நானும் பத்திரிகையின் பெயரிலிருந்து கடைசி பக்கத்தில் போட்டிருக்கும் 'பிரசுரித்தவர், அச்சடித்தவர்' பெயர் வரை ஒரு வரி விடாமல் படித்து விட்டேன். ரொம்ப தாங்ஸ்!" என்றார்.

"பேப்பரில் என்ன விசேஷம்?" என்று கேட்டேன்.

"விசேஷமாக ஒன்றுமில்லை!" என்றார்.

"காலையிலிருந்து ஒரு வரிகூட விடாமல் படித்துவிட்டுப் பத்திரிகையில் ஒன்றுமில்லை என்கிறாரே!" என்று நினைத்துக்கொண்டு, வெளியே செல்லத் திரும்பினேன்.

"உங்களைத்தானே! ஒன்றுமில்லை; சும்மா இப்படிக் கொஞ்சம் வந்து விட்டுப் போங்களேன்!" என்று என் தர்மபத்தினி அன்பும் ஆர்வமும் ததும்ப என்னை அழைத்தாள்.



வீட்டு எஜமானியின் உத்தரவாயிற்றே, அதை மறக்க முடியுமா?—பேசாமல் உள்ளே சென்றேன்.

அகமும் முகமும் மலர என்னை ஒரு தரம் பார்த்து விட்டு அவள் புன்முறுவல் பூத்தாள். பிறகு, "ஒன்றுமில்லை, பக்கத்து வீட்டுப் பங்கஜம் ஐம்பது ரூபாயில் ஒரு அழகான புடவை எடுத்து வந்திருக்கிறாள்.

அதைச் சும்மா பாருங்களேன்! அது மாதிரி எனக்கும் ஒன்று வேண்டும்" என்று சொல்லிப் புடவையைப் பிரித்துக் காண்பித்தாள்.

"ஐம்பது ரூபாய்க்குப் புடவை வாங்குவது ஒன்றுமில்லாத சமாசாரமா?" என்று என்னையே கேட்டுக் கொண்டு, "ஆகட்டும்" என்று சொல்லிவிட்டுக் கிளம்பினேன்.



★

என்னத்தைச் சொல்லுவது? சினிமாக் கொட்டகையிலும் ஒன்றுமில்லை. சினிமாப் படம் இல்லை என்று நினைத்து விடாதீர்கள்; டிக்கட்டுகள்தான் ஒன்றுமில்லை!

சும்மா கடற்கரைப் பக்கம் போய் நல்ல காற்றாவது வாங்கிவிட்டு வரலாமே என்று எண்ணிக் கால்களைக் கடற்கரையை நோக்கி நடக்கவிட்டேன்.

திடீரென்று 'கிரீச்' என்ற பயங்கரச் சத்தத்துடன் ஒரு கார் ரஸ்தாவில் நின்றது. திடுதிடு வென்று ஓடிப்போய்ப் பார்த்தேன். ஒரு பெண்மணி காரை ஓட்டிக் கொண்டு வந்திருந்தாள். அந்தக் காருக்கு அரை அடிக்கு முன்னால் ஒரு வாலிபன் சைக்கிளி லிருந்தபடி ஒரு காலைத் தரையில் ஊன்றிய வண்ணம் நின்று கொண்டிருந்தான்.

"என்ன, ஸார்! உங்களுக்குக் கண்ணும் காதும் கொஞ்சம் மந்தமோ?" என்று கேட்டாள் அந்தப் பெண்மணி.

"ஒன்றுமில்லை; சும்மா...... உங்களைப் பார்த்துக் கொண்டே வந்து விட்டேன்!" என்று அசடு வழியச் சொல்லி விட்டு அவன் சைக்கிளில் ஏறிக் கொண்டு 'விர்'ரென்று சென்று விட்டான்.

"உயிருக்கு ஆபத்தான விஷயத்திலுகூட ஒன்று மில்லைதானு!" என்று எண்ணி வியந்து கொண்டே, இந்த ஒன்று மில்லாத விஷயத்தைச் சற்று மறக்கலாம் என்று கடற்கரைக்குப் போய்த் தனிமையில் உட்கார்ந்தேன். நான் உட்கார்ந்திருந்த இடத்துக்குக் கொஞ்ச தூரத்துக்கு அப்பால் ஒரு பெண் குழந்தை அழுது கொண்டிருந்தது. அந்தக் குழந்தையிடம் சென்று, "ஏன் அம்மா அழுகிறாய்?" என்று கனிவுடன் கேட்டேன்.

அந்தக் குழந்தை ஒன்றுமே சொல்லாமல் சும்மா அழுதுகொண்டே இருந்தது. அதைத் தூக்கி வேடிக்கை காண்பித்தால் ஒரு வேளை அழுவதை நிறுத்தும் என்று நினைத்துத் தூக்கினேன். அந்தச் சமயத்தில் "இதோ! என் குழந்தை கௌரி!" என்று கத்திக் கொண்டே ஒரு பெண்மணி என்னை நோக்கி ஓடி வந்தாள்.

அந்த அம்மாளுக்குப் பின்னால் ஒரு வாலிபரும் போலீஸ்காரர் ஒருவரும் வந்து கொண்டிருந்தனர்.

அடுத்த விநாடி "ஸார்! கொஞ்சம் வாங்களேன்!" என்று போலீஸ்காரர் என்னைக் கூப்பிட்டார்.

"ஏன்?" என்றேன்.

"ஒன்றுமில்லை; சும்மாதான்!" என்று சொல்லி அழைத்துக்கொண்டு போனார்.

போலீஸ் ஸ்டேஷனுக்குள் சென்றதும், "இந்தக் குழந்தையின் கழுத்தில் இருந்த சங்கிலியைக் கழற்றினாயா?" என்று ஸப்-இன்ஸ்பெக்டர் என்னை நோக்கிக் கேட்டார்.

எப்படி இருந்திருக்கும், எனக்கு! "நல்ல வேடிக்கை ஸார், இது! அழுது கொண்டிருந்த குழந்தையை நான் சமாதானப் படுத்தினேன்; அவ்வளவுதான்! சங்கிலியை நான் பார்க்கவுமில்லை; கழற்றவுமில்லை!" என்று சொன்னேன்.

"இருக்கும் ஸார், இருக்கும்! வேடிக்கையாகவும் இருக்கும், விநோதமாகவும் இருக்கும்!" என்று சொல்லிக்கொண்டே 'பளீர்!' என்று என் கன்னத்தில் ஒரு அறை விட்டார் அந்த இன்ஸ்பெக்டர்.

"ஐயையோ! எனக்கு ஒன்றுமே தெரியாதே!" என்று அலறிக்கொண்டே கீழே விழுந்தேன்.

அவ்வளவுதான்; "என்ன இது! ஏன் இப்படி அலறிக்கொண்டு விழுந்தீர்கள்?" என்று கேட்டுக் கொண்டே கட்டிலிலிருந்து கீழே விழுந்திருந்த என்னைத் தூக்க முயன்று கொண்டிருந்தாள் என் மனைவி.

அருகில் இருந்த என் தமயனும் தாயாரும் "உடம்புக்கு என்ன?" என்று வியப்புடன் கேட்டார்கள்.

"ஒன்றுமில்லை; சும்மா...ஒரு கனவு கண்டேன்!" என்று சொல்லிக்கொண்டே நான் அசடு வழியச் சிரித்து வைத்தேன்!

# தீராத சண்டை

கி. ரா. கோபாலன்

**மா**சி மாதம் பிறந்தது; சொக்கன் வீட்டு வாசலிலுள்ள மாமரத்தில் இலைகள் துளிர் விட்டு மின்னின. மாம்பழ நாள் நெருங்கிவிட்டதை அந்த மரம் ஊரில் ஒவ்வொருவருக்கும் நினைப்பூட்டியது.

எவ்வளவோ மரங்கள் அந்த ஊரில் உண்டு. இருப்பினும் சொக்கன் வீட்டு மாங்காய்க்கு உள்ள எடுப்பும் ருசியும் வேறு எந்த வீட்டு மாங்காய்க்கும் இருக்காது. மரத்தில் கொத்துக் கொத்தாகக் காய்த்துத் தொங்கும்போது பார்த்தால் திருடியாவது அதில் ஒரு மாங்காய் சாப்பிட மாட்டோமா என்று எல்லோருக்கும் சபலமேற்படும்.

தேவலோகம் போய் அமிர்தத்தைக்கூட ருசி பார்த்து விடலாம். ஆனால் சொக்கன் வீட்டு வாசல் வேலியை நெருங்கிக் கீழே விழும் ஒரு பிஞ்சைக் கூட ஒருவரும் தொட்டுவிட முடியாது.

சொக்கனுக்கு வயது அறுபது. அவன் மனைவி பொன்னியும் அவனுக் கேற்ப வயதுள்ள கிழவிதான். ஒவ்வொரு வருஷமும் மாமரம் காய்த்துக் குலுங்கும் பருவம் நெருங்கியவுடன் சொக்கனும் அவன் மனைவியும் நாள் முழுதும் மாறி மாறிக் காவலிருப்பார்கள். இரவு வேளையில்கூடத் தடிக் கம்பு, அரிவாள் முதலிய ஆயுதங்களுடன் சொக்கன் மாமரத் தடியிலேயே படுத்துத் தூங்குவான். உள்ளே படுத்துத் தூங்கும் அவன் மனைவி ஒவ்வொரு நாளும் யாரோ ஐந்தாறு முரடர்கள் வந்து மரத்திலுள்ள மாங்காய்களை யெல்லாம் கொள்ளை யடித்துக் கொண்டு போவது போல் கனவு கண்டு எழுந்து மரத்தடியில் படுத்துறங்கும் தன் கணவனை எழுப்பிச் சொல்லுவாள். பாவம், சொக்கன் லாந்தர் வெளிச்சத்தைப் பெரிதாக்கிக் கொண்டு தடியையும் அரிவாளையும் எடுத்துக் கொண்டு போய் நான்கு புறமும் பார்த்து விட்டு, தன் மனைவி கண்டது வெறுங் கனவு என்ற முடிவுக்கு வருவான். சொக்கனும் அவன் மனைவியும் இவ்வளவு ஜாக்கிரதையா யிருந்தும் அந்த மாமரத்தில் தினம் இரண்டொரு காய்கள் திருட்டுப் போகாமலிருப்பதில்லை.

நான்கு பக்கமும் கிளைகளைப் பரப்பி நிற்கும் அந்த மரத்தில் எந்தப் பக்கத்துக் கிளையில் எந்தக் கொத்தில் எத்தனை காய்கள் இருக்கின்றன என்பதில் பொன்னிக்குக் கவனமுண்டு. அதேபோல் சொக்கனுக்கும் ஞாபகமிருக்கும். இதிலொரு விபரீதம் என்னவென்றால் அவர்களுடைய கவனம் அடிக்கடி தட்டுக் கெட்டுப் போய் விடும். இதனால் புருஷனின் காவலில் மனைவிக்கும் மனைவியின் காவலில் புருஷனுக்கும் சந்தேகம் ஏற்படும். "இந்தா! அந்த மேல் பக்கத்துக் கீழ்க் கிளையிலே வடக்குப் புறமா தொங்குகிற குலையிலே ஏழு காய்கள் இருந்ததே, இப்போ ஆறுதானே இருக்குது? ஒண்ணு எங்கே?" என்பாள் பொன்னி.

அந்தக் குலையில் ஆறுதானிருந்தது என்று சொக்கனுக்கு நன்றாய் ஞாபகமிருக்கும். அவன் தன் மனைவிக்கு மறுப்புக் கூறுவான். அவள் நம்பமாட்டாள். தர்க்கம் வலுத்துச் சண்டையில் வந்து முடியும். புருஷனும் மனைவியும் இப்படிச் சதா மாங்காய்த் திருட்டைப் பற்றிய சண்டை போட்டுக்



சொன்னது பக்கத்து வீட்டிலிருப்பவர்களுக்கெல்லாம் விநோதமாயிருக்கும். இப்படித் திருட்டுப் போகாத மாங்காய்களைப் பற்றிச் சண்டை நடக்குமே தவிர உண்மையாகத் திருட்டுப் போன மாங்காய்களைப் பற்றி அவர்கள் சண்டை போட்டதே கிடையாது.

★

**ப**ங்குனி போய்ச் சித்திரையும் பிறந்தது. மரத்தில் சரம் சரமாகத் தொங்கிக் கொண்டிருந்த மாங்காய்களெல்லாம் பழுக்கக்கூடிய தருணம். காற்று சற்று அதிகமாக வீசியதால் இரண்டொரு காய்களும் கீழே உதிர்ந்து விழுந்தன. அன்று மாமரத்தடியில் சொக்கன் உட்கார்ந்து காவல் புரிந்து வந்தான். வெளியே வேலிக்கு அப்புறத்தில் இரண்டு குழந்தைகள் நின்று மாமரத்தையே அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்தன. அந்தக் குழந்தைகளைப் பார்த்ததும் சொக்கனுக்கு அடக்க முடியாத கோபம் வந்து விட்டது. "யாரது?" என்று அதட்டிக் கொண்டே அவன் கையில் தடியுடன் எழுந்து வந்தான்.

குழந்தைகள் இரண்டும் பயந்து நடுங்கின. ஒன்று ஆண் குழந்தை; மற்றது பெண். ஆண் குழந்தைக்கு வயது எட்டு இருக்கலாம்; மற்றவள் அவன் தங்கை போலிருக்கிறது. அந்தப் பெண்ணிற்கு ஆறு வயதிருக்கலாம். சொக்கனின் அதட்டலில் அந்தப் பெண் குழந்தை பயந்து தன் அண்ணனின் தோளைப் பிடித்துக் கொண்டாள். சாண் பிள்ளையானாலும் ஆண் பிள்ளை என்பதை அந்த இடத்தில் நிரூபிப்பவன் போல் அவன் சிறிதும் அஞ்சாமல் தைரியமாய்த் தான் இருந்தான்.

சொக்கனின் அதட்டலும், துடிக்கும் மீசையும், பயங்கரமான அரிவாளும் கைத் தடியும் அந்தப் பையனைக் கலக்கி விடவில்லை. அவன் ஒரு கையால் தங்கையின் இடுப்பைச் சுற்றி அணைத்துக் கொண்டு மிகவும் சுவாதீனத்துடன் சொக்கனைப் பார்த்து, "ஆளுக்கொரு மாங்காய் கொடு, தாத்தா! ஒரே ஒரு காய் போதும்!" என்றான்.

"மாங்காயா, கிடையாது! போங்க, இங்கே நிக்காதீங்க! அப்புறம் அடிச்சுப் பிடுவேன்; ஓடுங்க!" என்று பயங்கரமாக எச்சரிக்கை செய்து பார்த்தான் சொக்கன்.

"மரத்திலே அவ்வளவு காய் இருக்குதே, தாத்தா! ஒரே ஒரு காய் கொடுங்க, தாத்தா!" என்று கெஞ்சினான் அந்தப் பையன். பெண் குழந்தை மரத்தையே அண்ணாந்து பார்த்துக் கொண்டு நின்றது.

"மரத்திலே அவ்வளவு காய் இருக்குதா! வெளியிலே இருக்கிறவங்க வைக்கிற திருஷ்டி போதாதுன்னு நீ வேறு வைக்கிறியா? ஊஹூம்; இது தருமத்துக்கு வளர்ந்த மரமில்லை. போங்க, போங்க!" என்றான் சொக்கன்.

"தருமத்துக்கு இரண்டு காய் கொடுத்தா நல்லதுதான், தாத்தா! இவ்வளவு காயிலே இரண்டு கொடுத்தா குறைஞ்சு போயிடாது, தாத்தா!" என்று எட்டு வயதுச் சிறுவன் அறுபது வயதுக் கிழவனாகிய சொக்கனுக்குத் தர்மத்தைப் பற்றிய உபதேசத்தைச் சுருக்கமாக எடுத்துச் சொன்னான்.

சொக்கன் அந்தக் குழந்தைகளை வேறு வகையில் சமாதானம் செய்து அனுப்பப் பிரயத்தனப் பட்டான். நயமான குரலில், "இதைக் கேளு, பேராண்டி!. இந்த மரத்துக் காயெல்லாம் ஒரே புளிப்பு; பல்லைக் கொட்டிப் போயிடும். உடம்புக்கு ஒத்துக்கிடாது—போயிடுங்க!" என்று பரிவோடு முதுகில் தட்டிக் கொடுத்தான்.

"புளிப்பு மாங்காய்தான் எங்களுக்கு ரொம்பப் பிடிக்கும், தாத்தா!" என்றான் பையன். தங்கையும் அண்ணனுடைய வார்த்தைகளை ஆமோதிப்பவன்போல் சிரித்துக்கொண்டே தலையை ஆட்டினாள்.

"புளிப்பு மாங்காய்தான் உங்களுக்குப் பிடிக்குமா?" என்று கேட்டுக்கொண்டே சொக்கன் ஆச்சரியத்தோடு அந்தக் குழந்தைகளைப் பார்த்தான். அந்தச் சிறுமி தன் தமையனின் அணைப்பிலிருந்தபடியே அழகான—அகன்ற பசிய விழிகளால் சொக்கனைக் கெஞ்சுவதுபோல் பார்த்த வண்ணம் நின்று கொண்டிருந்தாள்.

சிறிது நேரம் அந்தப் பெண் குழந்தையின் முகத்தைப் பார்த்தான் சொக்கன். அனல் வாடை பட்ட மெழுகாகிவிட்டது அவன் மனம். மெதுவாக அந்தப் பெண் குழந்தையை நெருங்கி அவள் கன்னத்தைத் தடவிக் கொடுத்துக்கொண்டே, "நாளைக்கு ஒரு மாங்காய் கொடுத்துவிடுகிறேன்; ஓடிப் போயிடுறீங்களா?" என்றான்.

இரண்டு குழந்தைகளும் "சரி" என்று தலையை ஆட்டின. சொக்கன் தன் மனைவிக்குப் பயந்து வீட்டிற்கு உட்புறம் தன் பார்வையைச் செலுத்திவிட்டு, அவசர அவசரமாகக் காற்றில் விழுந்திருந்த இரண்டு பெரிய மாங்காய்களை எடுத்துவந்து அந்தக் குழந்தைகளின் சிறிய கைகளில் வைத்துவிட்டு, "ஓடிப் போயிடுங்க! நான் மாங்காய் கொடுத்ததைப் பாட்டி கண்டுக்கிட்டா லேசில் விடமாட்டா! ஓடியே போயிடுங்க!" என்று பதட்டத்துடன் துரிதப்படுத்தினான்.

குழந்தைகள் இரண்டும் சிட்டாய்ப் பறந்து விட்டன. சொக்கன் சுற்றிலும் ஒரு தடவை பார்த்துவிட்டுக் கட்டிலில் வந்து உட்கார்ந்தான். தன் ஆயுளில் ஒரு தடவை கூட, ஒரு மாங்காயைக் கூட, தானாக இரக்கப்பட்டு அவன் ஒருவருக்கும் கொடுத்ததில்லை. அதுவும் தன் மனைவிக்குத் தெரியாமல் அவன் அப்படிச் செய்ததே கிடையாது. இந்தக் குழந்தைகள் அவன் மனதைக் கரைய வைத்ததற்கு ஏதோ காரணம் இருக்கத்தானே வேண்டும்?



"அடே சீமா! இப்போது நான் உனக்காகப் பார்த்து வந்திருக்கிற பெண்ணின் பெயரைக் கேட்பதற்கே 'ஜம்' மென்றிருக்கும்!"

"அது என்ன பெயர் மாமா, 'ஜம்' என்று இருக்கிற பெயர்?"

"அவள் பெயர் பங்கஜம்!"



குழந்தைகள் ஒரு நாள் ருசி கண்டால் போதாதா? ஒவ்வொரு நாளும் அவர்கள் காலை வேளையில் வந்து சொக்கனிடமிருந்து இரண்டு மாங்காய்கள் வாங்காமல் போவதில்லை.

முன்பெல்லாம் அவன் மனைவி அவன் சரியாகக் காவலிருப்பதில்லையென்றும் அவன் ஊரில் உள்ளவர்களுக்கெல்லாம் மாங்காயைத் தூக்கிக் கொடுத்துவிடுகிறானென்றும் சந்தேகித்துச் சண்டை போடுவது அவனுக்கு அவ்வளவு மன வருத்தத்தைக் கொடுப்பதில்லை. இப்பொழுது அந்தக் குழந்தைகளுக்குத் தினம் இரண்டு மாங்காய்கள் அவளுக்குத் தெரியாமல் கொடுத்து வருவதால் வீட்டில் சண்டை நேரிடும்போதெல்லாம் அவனது மனச்சாட்சி அவனை மிகவும் வாதனை செய்யும். அதனால் அவன் அவளுக்கு எதிராக இப்பொழுது பேசுவதே கிடையாது.

ஒவ்வொரு நாளும் காலை வேளையில்தான் சொக்கன் மாமரத்தடியில் காவல் இருப்பது வழக்கம். சாயந்திர வேளையில் வயல் வெளிகளைச் சுற்றிப் பார்க்கப் போவான். அப்பொழுது அவன் மனைவி பொன்னி வீட்டுக் காரியங்களை முடித்துக்கொண்டு காவலுக்கு வருவாள்.

ஒரு நாள் சொக்கன் வயலைச் சுற்றிப் பார்த்துவிட்டுச் சீக்கிரமாகவே வீடு திரும்பினான். அவன் தெருக் கோடியில் வரும் போது தன் வீட்டு வெளிப் பக்கத்திலிருந்து இரண்டு குழந்தைகள் மாங்காயுடன் ஓடுவது தெரிந்தது. அவன் மனைவி வெளியே வந்து அந்தக் குழந்தைகள் ஓடும் திசையைப் பார்த்துக் கொண்டிருந்ததும் தெரிந்தது. அதே குழந்தைகள் — சந்தேகமில்லை! தன்னிடம் தினம் காலையில் இரண்டு மாங்காய்களை வாங்கிக்கொண்டு ஓடும் அதே குழந்தைகள்! — அவனுக்குச் சிறிது ஆச்சரியமாகத்தானிருந்தது.

சொக்கன் ஆத்திரத்துடன் தன் மனைவியை நெருங்கி, "யார் அந்தக் குழந்தைகள்?" என்று கர்ஜித்தான்.

கிழவிக்கு அவன் இருந்த நிலையைப் பார்த்ததும் கொஞ்சம் அச்சமேற்பட்டது. ஏதோ கனவுக் குற்றத்தைச் செய்துவிட்டவள்போல் தயக்கத்துடன், "அதுங்களா?

ரொம்ப நல்ல குழந்தைகள்! பாவம், கெஞ்சிக் கேட்டுதுங்க; நிலக்கு ஒரு மாங்காய் கொடுத்தனுப்பினேன்!" என்றான்.

சொக்கனின் படபடப்பு தணியவில்லை. "தினமும் கொடுக்கிறாயா, இன்னிக்கு மாத்திரம் கொடுத்தாயா?" என்று கேட்டான். பொன்னி பயத்தோடு, "தினமும் தான் கொடுப்பேன்! எனக்கு அந்தக் குழந்தைகளைப் பார்க்கும்பொழுது இரக்கமாயிருக்கும்!" என்றாள்.

"தினமும் கொடுக்கிறயா......?" என்று கேட்டுவிட்டுச் சிறிது நேரம் மௌனமாக நின்றான் சொக்கன். பிறகு ஒரு பெருமூச்சு விட்டான். அவன் முகத்தில் உடனே ஒரு தெளிவு ஏற்பட்டது. மனதிலும் புயல் ஓய்ந்ததுபோல் ஒரு சமாதானம் ஏற்பட்டது. "தினமும் காலையில் நான் கூட அந்தக் குழந்தைகளுக்கு இரண்டு மாங்காய் கொடுப்பது வழக்கம்!" என்றான் அடங்கிய குரலில்.

"நீங்ககூட தினம் இரண்டு காய் கொடுப்பீங்களா? இதை ஏன் இத்தனை நாளா என்னிடம் சொல்லல்லே?" என்றாள் பொன்னி கோபம் கலந்த குரலில்.

"நீ ஏன் இதுவரை சொல்லல்லே?" என்று எதிர்க் கேள்வி போட்டான் சொக்கன்.

"நான் காரணமாகத்தான் சொல்லல்லே! அந்தப் பெண் குழந்தையைப் பார்த்தீங்களா? அதைப் பார்க்கும்போது நம்ம சின்னியின் முக ஜாடையா யில்லே? அந்தக் குழந்தையை நீங்க பார்த்தீங்கன்னு அசாத்யமாப் பிரியப்பட்டுக் கணக்கு வழக்கில்லாமல் மாங்காயை அள்ளிக் கொடுத்துடப் போறீங்களேன்னு நினைச்சுத்தான் உங்ககிட்டே சொல்லாமலிருந்தேன்!" என்றாள் பொன்னி.

"நீயும் அந்தக் குழந்தையைப் பார்த்ததும் சின்னியை ஞாபகப்படுத்திக்கிட்டு ஏகமா மாங்காயை அள்ளி விட்டுடப்போறியேன்னு நான் நானும் உங்கிட்ட சொல்லாமலிருந்தேன்!" என்றான் சொக்கன்.

பொன்னி மௌனமாக நின்று கொண்டிருந்தாள். சொக்கனும் அவள் முகத்தைப் பார்த்துக் கொண்டே நின்றான். தங்களுக்குப் பிறந்த ஒரே ஒரு குழந்தை சின்னி அருமையாக வளர்ந்து ஆறு வயது வரையில் இருந்து, இறந்துபோனது அவர்களுக்கு அறுபது வயதாகி விட்டாலும் மறந்துவிடுமா?

# காலக்ஷேபம்

**பேஷ்!**

"உங்கள் வீட்டுக் கல்யாண அழைப்பு வந்தது. எனக்கு வரச் சௌகரியப்படவில்லை; மன்னிக்கணும்!"

"ஓகோ! நீங்கள் கல்யாணத்துக்கு வரவில்லையா? நான் கவனிக்கவே இல்லை!"

★

**ரொம்ப சரி!**

**கூட்டத்தில் ஒருவர்:**—ஏன் ஐயா, இப்படித் தள்ளுகிறீர்? சுப்ரமண்ய ஸ்வாமி மயில் வாகனத்திலே உட்கார்ந்திருக்கிற மாதிரி நான் உட்கார்ந்திருக்கிறேன், இப்படித் தள்ளுகிறீரே!

**மற்றவர்:**—நீர் மயில் வாகனத்திலே உட்கார்ந்திருக்கிறது சரிதான்; அந்த மயில் வாகனம் யார் என்று கவனித்தீரா?

★

**வேண்டியதுதான்!**

**வீட்டுக்காரர்:**— இன்னொரு டம்ளர் கொண்டுவரச் சொல்லட்டுமா, காப்பியை ஆற்றுவதற்கு?

**வந்தவர்:**—ஆகா, கொண்டுவரச் சொல்லுங்கள், ஸார்! அப்படியே இந்தக் காப்பியையும் கூட வைத்துக் கொண்டுவரச் சொல்லுங்கள்!

★

**பரஸ்பரம்!**

"நான் பட்டணத்துக்கு வரும்போது என் பையில் ஒரு தம்படிக்கூடக் கிடையாது."

"இதென்ன பிரமாதம்! நான் வரும்போது எனக்குப் பையே கிடையாதே!"

★

**வாழ்த்த வேண்டாம்!**

**நண்பன்:**—நீ என்னிடம் கடனாக வாங்கிய பத்து ரூபாயை எப்போது தரப்போகிறாய்?

**மற்றவன்:**—நாளைக்கு உனக்குக் கல்யாணம், இல்லையா? அந்தச் சமயத்தில் திருமண வாழ்த்துடன் உனக்குச் சேரவேண்டிய ரூபாய் பத்தையும் செலுத்திவிடுகிறேன்.

**நண்பன்:**—நீ ரூபாயைக் கொடு, போதும். நானே என்னை வாழ்த்திக் கொள்ளுகிறேன்!

ஷாலிமார் தயாரிப்புகளை ஆர்டர் செய்யும்போது எந்த வேலைக்காக என்பதை தெரிவிக்கவும்.

நீண்டகாலம் உழைக்கக்கூடிய

# பளபளப்பான வர்ணப்பூச்சு



# அடிக்காம்போல் சொல்லுங்கள்...

33 அழகிய வர்ணங்களில் கிடைக்கும் ஷாலிமார் டியூரோலாக் எனாமல் பிரகாசமும், மிக பளபளப்பும், பீங்கான் போன்ற மழமழப்புமுள்ளவை; இரவுக்குள்ளே காய்ந்து விடும். வீட்டு உட்புற வேலைகளுக்கும், மேஜை, நாற்காலி, கதவுகளுக்கும் ஏற்றவை.

பூரண பயன்பெற டியூரோலாக்கை இரு பூச்சு கொடுக்கவும்.

# ஷாலிமார் டியூரோலாக்

மிகச்சிறந்த எனாமல்.

SFX 56 TM

**SHALIMAR PAINT, COLOUR & VARNISH CO., LTD.,**

Post Box 126, Madras 1. Importers & Distributors for Ceylon :
Lewis Brown & Co., Ltd., Post Box 85, Colombo

# ஏமாந்த பூனையார்!

எஸ். ராமநாதன்

ஓர் ஊரில் ஒரு பாழடைந்த சத்திரம் இருந்தது. அதில் சுமார் நூறு எலிகளுடைய ஒரு பெரிய குடும்பம் வசித்து வந்தது. அந்தச் சத்திரத்தில் இருந்த ஒரு கிழட்டுப் பூனை எலிகளை இஷ்டம்போல் வேட்டையாடி வந்தது. திடீர் திடீரென்று அந்தப் பூனை அவற்றின் மேல் பாய்ந்து, அகப்பட்டதைக் கொன்று தின்றுவிடும்.

இதனால் எலிகளின் குடும்ப எண்ணிக்கை வரவரக் குறைய ஆரம்பித்தது. ஆகவே, பூனையை அந்தச் சத்திரத்திலிருந்து எப்படித் துரத்துவது என்று எலிகள் யோசித்தன. அதற்காக எல்லா எலிகளும் சேர்ந்து ஒரு மகாநாடு கூட்டின. அதற்கு வந்திருந்த எலிகள் தங்கள் தங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவித்தன. சில எலிகள், பூனை வரும்பொழுது நாம் பதுங்கியிருந்து தாக்கி அதைக் கொன்றுவிடலாம் என்றன. மற்றும் சில, நாம் போர்க்கோலம் பூண்டு, பூனையின் இருப்பிடத்தை முற்றுகையிடலாம்; அப்பொழுது பூனை வெளியே வரும்; அதைச் சிறைப் பிடித்துத் தக்க தண்டனை விதிக்கலாம் என்றன. ஆனால் ஒரு யோசனையாவது சரியானதாய்ப் படவில்லை.

கடைசியில் தலைவர் கிழட்டு எலி எழுந்து, "நாம் ஒரு மணியைப் பூனையின் கழுத்தில் கட்டி விடலாம். பிறகு அது வரும்பொழுது மணியோசை கேட்கும். அந்த ஓசையைக் கேட்டதும் நாம் ஓடி ஒளிந்து அதனிடமிருந்து தப்பித்துக் கொள்ளலாம்" என்று சொல்லிற்று.

"யார் பூனைக்கு மணி கட்டுவது? ஏற்கெனவே இதைப் பற்றி ஒரு கதைகூட இருக்கிறதே! அது உமக்குத் தெரியாதா?" என்று கேட்டுச் சில எலிகள் அதை ஆட்சேபித்தன.

"நான் போய்க் கட்டுகிறேன். அப்படி இறக்க நேர்ந்தாலும் நான் கிழவன்தானே!" என்றது தலைவர் எலி. அதற்கு எல்லா எலிகளும் ஒப்புக்கொண்டன.

அன்று இரவு ஒரு குண்டு எலி கொல்லைப்புறத்திலிருக்கும் குப்புசாமியின் வீட்டிற்குச் சென்று, அவன் சுவாமி பூஜைக்காக வாங்கி வைத்திருந்த மணியைத் தூக்கிக்கொண்டு வந்துவிட்டது.

மறுநாள் காலை கிழட்டு எலி மணியை எடுத்துக் கொண்டு பூனை இருக்குமிடம் சென்றது. பூனை கண்ணை மூடிக்கொண்டு உட்கார்ந்திருந்தது. "சுவாமி! தாங்கள் மிகவும் கிழவராய்விட்டீரே! உங்களுக்குத் தினமும் சரிவர ஆகாரம் கிடைக்கிறதா?" என்று பூனையாரை க்ஷேமம் விசாரித்தது கிழட்டு எலி.

"தம்பி! எப்படி எனக்கு ஆகாரம் கிடைக்கும்? என்னால் அப்படி இப்படி நகரக்கூட முடியவில்லை. இன்றுடன் சாப்பிட்டு நாலு நாட்கள் ஆகின்றன!" என்று சொல்லிப் பூனை அழுதது.

"சுவாமி! தாங்கள் இன்று முதல் அந்தக் கவலையை விட்டுவிடுங்கள். இதுவரை நீங்கள் இங்கே ஏகசக்ராதிபதியாயிருந்து, எங்களை மற்ற எதிரிகளிடமிருந்து காப்பாற்றி வந்தீர்கள். அதற்காக நாங்கள் ஒரு முடிவு செய்துள்ளோம். எங்களுடன் நீங்கள் ஒரு ஒப்பந்தம் செய்து கொள்ளுங்கள். எங்களில்






யாரையும் என்னுடைய உத்தரவு இல்லாமல் பிடிப்பதில்லை என்று உறுதி கூறுங்கள். அன்றைய தினத்திலிருந்து எங்களில் ஒருவர் தினந்தோறும் உங்களுக்கு இரையாவதற்காகத் தானே முன் வருவார். நீங்கள் தினசரி எங்கள் வளையருகில் வந்து நின்று அவரை அழைத்துக்கொண்டு போய்ச் சாப்பிட்டுப் பசியாறலாம். அதற்கு நீங்கள் வளையருகில் வந்திருக்கிறீர்கள் என்று எங்களுக்குத் தெரிய வேண்டாமா? அதற்காக நான் உங்கள் கழுத்தில் ஒரு மணி கட்டி விடுகிறேன். பிறகு முதல் பலியாக ஒரு குண்டு எலியை உங்களுக்கு அனுப்பி வைக்கிறேன். என்ன சொல்கிறீர்கள்?" என்று தேனொழுகக் கேட்டது கிழட்டு எலி.

பூனை கிழட்டு எலி சொன்னதை அப்படியே நம்பி, தினமும் கஷ்டப்படாமல் சாப்பாடு கிடைக்கும் என்று எண்ணித் தன் கழுத்தில் மணியைக் கட்டிக் கொள்ளச் சம்மதித்து விட்டது. கிழட்டு எலியும் அதற்குச் சந்தோஷத்துடன் மணியைக் கட்டி விட்டுச் சென்றது.

**ம**றுநாள் சாப்பாட்டு வேளையில் பூனை ஆடி அசைந்து கொண்டே வளையை அடைந்தது. அது வெகு தூரத்தில் வரும்பொழுதே மணியோசை கேட்டது. அந்த ஓசையைக் கேட்டதும், வெளியேயிருந்த எலிகளெல்லாம் வளைக்குள் ஓடோடியும் சென்று ஒளிந்து கொண்டன. பூனை வெகு நேரம் வரை வளையண்டை காத்திருந்தது. ஒரு எலிகூடக் கிழட்டு எலி சொன்னபடி வரவில்லை. பசியின் மிகுதியால் பூனை 'மியாவ், மியாவ்' என்று கத்த ஆரம்பித்தது.

கிழட்டு எலி உள்ளேயிருந்தபடி, "ஏமாந்த பூனையாரே! ஏன் கத்துகிறீர்கள்? நாங்கள் உங்களுடைய வாயிலிருந்து தப்பவே இந்தத் தந்திரத்தைக் கையாண்டோம். இனிமேல் நீங்கள் பட்டினியால் சாக வேண்டியதுதான்; வேறு வழியில்லை, திரும்பிச் செல்லும்!" என்றது.

பாவம், பூனை ஏமாற்றத்தால் பட்டினியுடன் திரும்பிச் சென்றது!

# கம்பர் தரும் காட்சி

**டி.கே.சி.**

## 254. நீயே அரசாளவோ!

**வி**பீஷணன் இரணியனது வரலாற்றை ஒரு கதையாகத்தான் சொன்னான். அந்தக் கதையில் நரசிம்ம மூர்த்தி இரணியனது ஆணவத்தை நீக்கினார் என்பது விஷயம்.

நெஞ்சைக் கீறி இதயத்தில் உறைந்து கிடந்த ஆணவத்தை எடுத்தார் என்று வின்னியாசமாகச் சொல்லுகிறது கதை. அவ்வளவுதான்.

ஆனால், பிரகலாதனால் அவன் தந்தைக்குக் கொடிய மரணம் ஏற்பட்டது என்று தொனிக்கும் படியாகக் கதை கட்டிக் கொள்ளுகிறான் ராவணன்.

ராவணனுக்கு ஏற்பட்ட அவமானம், பயம், கோபம் எல்லாம் சேர்ந்து அவனை ஒரு வெறிக்கு உள்ளாக்கி விட்டது. அந்த வெறியில்க் கதையின் ரஸம்கூட மாறிப் போய்விடுகிறது.

"நட்டார் கண் நந்தும் நகை நலம்" என்றபடி நம்மோடு ஒத்த உணர்ச்சி அனுதாபங்கள் இருந்தால்த்தான் ஹாஸ்யத்தையோ ரஸத்தையோ அனுபவிக்க முடியும். அல்லாதபக்ஷம் எல்லாம் தாறுமாறாகத்தான் படும்.

அப்படிப்பட்ட நிலையிலிருந்து ராவணன் பேசுகிறான்.

* * *

**வி**பீஷணன் சொன்னதை ராவணன் கேட்டுக் கொண்டுதான் இருந்தான். ஆனாலும் அப்படிக் கேட்ட விஷயத்தின் உட்பொருளைத் தெரிந்து கொள்ளவில்லை. மனம் ஓரே கோணவாய்க் கோணிப் போய்விட்டது. பிறகு பேச்சின் பயனை எங்கே காணப் போகிறான்.

**சந்தம்**

தானன தானன
தான தன்னன

கேட்டனன் இருந்தும், அக்
கேள்வி தேர்கலாக்

கோட்டிய சிந்தையான்
உறுதி கொண்டிலன் :—

மூட்டிய தீயென
முடுகிப் பொங்கினன்,

ஊட்டரக்(கு) ஊட்டிய
அனைய ஒண்கணான்.

[கேட்டனன் இருந்தும் : விபீஷணனது பேச்சு காதில் விழுந்து கொண்டிருந்தும் : அக் கேள்வி தேர்கலா : அந்த விஷயத்தின் உட்பொருளை அறிய முடியாத; கோட்டிய சிந்தையான் : பைத்தியம் கொண்ட மனத்தனாய் ; உறுதி கொண்டிலன் : சொன்ன சொல்லின் பயனை அடையவில்லை ; மூட்டிய தீயென முடுகிப் பொங்கினன் : எரிகிற நெருப்பில் எண்ணெய் விட்ட மாதிரி கோபம் அதிகமாகவே பொங்கியது—யாருக்கு ? ஊட்டரக்கு ஊட்டிய அனைய ஒண்கணான் : பெண்களின் பாதத்துக்கு ஊட்டும் செம் பஞ்சுக் குழம்பையே கண்ணுக்கு ஊட்டிய மாதிரி செக்கச் செவேர் என்று இருந்த தீப்பொறி பறக்கும் ; ஒண்கணான் : பிரகாசிக்கும் கண்ணை உடைய ராவணன்.]

குறிப்பு: செய்யுள் ராவணனைக் கோபாக்கினி மயத்தில் வைத்துக் காட்டுகிறது. அருமையான பாவம் கொண்ட வர்ணனை.

* * *

"**இ**ரணியன் என்பவன் எங்களை விட மிக்க சக்தி வாய்ந்தவன் என்று நீ விஸ்தரிக்கிறாய். என்னை அவமானப் படுத்தத்தான் அப்படி விஸ்தரிக்கிறாய்.

"அந்த இரணியனை ஒருவன் எதிர்த்துக் கொன்றான் என்று வேறு சொல்லுகிறாய்."

இரணியன் என்பவன்
எம்மனோரினும்

முரணியன் ; அவன்தனை
முருக்கி முற்றினன்

அரணியன் என்றவற்(கு)
அன்பு பூண்டனை :—
மரணம்என் றொருபொருள்
மாற்றும் வன்மையோய்.'

[முரணியன் : சக்தி வாய்ந்தவன் ; அவன் தனை முருக்கி முற்றினன் அரணியன் என்று : அவனை எதிர்த்துக் கொன்றவன் உன்னைப் பாதுகாப்பான் என்று : அரண் : பாதுகாப்பு : அவற்கு அன்பு பூண்டனை : அவனிடம் பக்தி வேறு கொள்ளுகிறாய் :—ஏன் இப்படிச் செய்கிறாய் என்பதும் தெரியும் எனக்கு—மரணம் என்று ஒரு பொருள் மாற்றும் வன்மையோய்: மரணம் என்கிற தத்துவத்தை இல்லாமல் அடித்து விடலாம் என்று எண்ணுகிறாய் நீ. அது வெறும் பைத்தியக்காரத்தனம்.]

* * *

இந்த மாதிரி கோப வெறிக்கு உள்ளான ராவணன் பேசுகிறான்.

"தன்னை வளர்த்த தந்தையின் நெஞ்சை நரசிம்ம ரூபமாய் வந்த விஷ்ணு கிழித்துவிட்டான். அப்படிக் கிழித்ததைப் பார்த்துச் சந்தோஷப் பட்டானே அந்தப் பயல் பிரகலாதன். நல்ல பயல்!"

'ஆயவன், வளர்த்ததன்
தாதை ஆகத்தை
மாயவன் கல்லிய
மகிழ்ந்த மைந்தனும்
ஏயும்நம் பகைஞருக்கு
இனிய நண்புசெய்
நீயுமே நிகர்,பிறர்
நிகர்க்க நேர்வரோ!'

[ஆயவன் : மேலே சொன்னபடி கோபம் கொண்ட ராவணன் : வளர்த்த தன் தாதை ஆகத்தை : குழந்தைப் பருவத்தில் இருந்து தன்னை வளர்த்த தந்தையாகிய இரணியனது நெஞ்சை : மாயவன் கல்லிய : விஷ்ணு பிளந்த காரியத்தை : மகிழ்ந்த மைந்தனும் : பார்த்து அனுபவித்த பிரகலாதனும் : ஏயும் நம் பகைஞருக்கு இனிய நண்பு செய் நீயுமே நிகர்: இப்போது நேர்ந்த பகைவனாகிய மனிதனுக்கு நல்ல நண்பனாய் உதவி செய்யும் நீயுமே சரி : பிறர் நிகர்க்க நேர்வரோ : பிறர் யாராவது உங்களை ஒப்பானவராக ஆவார்களோ?]

குறிப்பு : பைத்தியக்கார ஹாஸ்யமும் கோபமும் ஒன்றாய்ப் பின்னிக்கொண்டு வருகிறது ராவணனுடைய பேச்சில்.

ராவணன் விபீஷணனது நோக்கத்தைக் கொஞ்சமும் அறிந்த பாடாக இல்லை.

"நீ சொன்னாயே கதை, அதில் மகனை பிரகலாதன் இரணியனைக் கொன்ற பின் என்ன செய்தான், தெரியுமா?"

பாழிசால் இரணியன்
புதல்வன் பண்பெனச்,
சூழ்வினை முற்றியான்
அவற்குத் தோற்றபின்,
ஏழைநீ என்பெருஞ்
செல்வம் எய்திப்பின்
வாழ்வோ கருத்(து)! அது
வரவற்(று) ஆகுமோ.'

[பாழி சால் இரணியன் : மகா பலம் பொருந்திய இரணியனது : புதல்வன் பண்பென : மகனுடைய குணத்துக்குத் தக்கவாறு : சூழ்வினை முற்றியான் அவற்குத் தோற்றபின் : உன்னுடைய சூழ்வினை பூர்த்தியாகி நானும் அந்த ராமனுக்குத் தோற்ற பிறகு : ஏழை நீ : அறிவில்லாதவனாகிய நீ என் செல்வத்தை அடைந்து விடுவாயோ?—மாட்டாய், ஒருகாலமும் முடியாத காரியம் ; வற்று ஆகுமோ : நடக்கிற காரியமா!]

கோப வெறியில் ராவணனுக்குத் தோன்றுவதெல்லாம் ஒன்றுதான்—அதாவது, விபீஷணன் தன்னைக் கொன்றுவிட்டு அவனே அரசனாகப் பார்க்கிறான் என்பதுதான். கோப வெறியில் இப்படியும் எண்ணத் தோன்றும் ; இதற்கு மேலும் எண்ணத் தோன்றும்!

## காலி வீடு!



ஜோஸ்யர் :—இப்போ சந்திரன் 7-ம் வீட்டிலேருந்து 2-ம் வீட்டுக்கு வந்துட்டான். குரு 5-ம் வீட்டைக் காலி பண்ணிட்டுப் போனதிலே...

கிரகஸ்தர் :—இந்தாங்கோ ஜோஸ்யர்வாள்! குரு காலி பண்ணிட்டுப் போன 5-ம் வீடு எந்தத் தெருவிலே இருக்குன்னு பார்த்துச் சொல்லுங்கோ. நான் அங்கே முதலில் குடித்தனம் போயிடறேன்!

# ஊர்வலம்

ஆசிரியர் பிரேம்சந்த்

மொழிபெயர்ப்பு
ஃ அக்ஷயம் ஃ






( சென்ற இதழ்த் தொடர்ச்சி )

நீடயரென்று ஒரு பெண் வீரபல்சிங்கைப் பார்த்து, "ஏன் இன்ஸ்பெக்டர் ஸார், எங்களையும் தடிகொண்டு அடிக்கச் சொல்லுவீர்களோ? உங்களைப் பார்த்தாலே எங்களுக்குப் பயமாயிருக்கிறது" என்றாள்.

"உங்கள் கூட்டாளிகளில்தானே யாரோ ஒருவர் அன்று மால் ரோடில் இந்த வீரரை அடித்துக் காயப்படுத்தியது?" என்று கேட்டாள் இன்னொருத்தி.

"இவருடைய கூட்டாளியில்லை; இவரே தான்" என்று குறுக்கிட்டு விஷயத்தை விளக்கினாள் மிட்டன்பாய்.

"ஆ! இவர்தானா! ஸ்வாமி, உங்களுக்குக் கோடி நமஸ்காரம். தங்களுடைய கருணையே கருணை! அதன் காரணமாகத்தானே நாங்களும் தங்கள் தடியடிப் பிரயோகத்தைப் பார்க்க வந்திருக்கிறோம்!" என்று பல பெண்கள் ஒருங்கு சேர்ந்து கூறினர்.

வீரபல்சிங் மிட்டன்பாயைச் சுட்டெரித்து விடுபவர் போல ஒரு முறை விழித்துப் பார்த்தார். ஆனால் வாய் திறந்து ஒன்றும் சொல்லவில்லை.

"நாங்கள் ஒரு கூட்டம் கூட்டி உங்களைக் கௌரவிப்பதாயிருக்கிறோம். கூப்பிட்டால் வருவீர்கள் அல்லவா?" என்று கேட்டாள் கூட்டத்தில் இன்னொரு பெண்மணி.

"நீங்கள் வெள்ளைக்காரரோ? இவ்வளவு சிவப்பாயிருக்கிறீர்களே!" என்று பரிகசித்தாள் வேறொருத்தி.

"என் வயிற்றில் இம்மாதிரிப் பிள்ளை பிறந்திருந்தால், நான் அப்பொழுதே கழுத்தைத் திருகிக் குழிவெட்டிப் புதைத்திருப்பேனாக்கும்!" என்று ஆத்திரத்துடன் சொன்னாள் ஒரு கிழவி.

ஒரு யுவதி அந்தக் கிழவியை மடக்கி, "நன்றாய்ச் சொன்னீர்கள், பாட்டி! நாய் கூட உப்புத் தின்கிற வீட்டுக்கு இரண்டு நினைப்பதில்லை. இவரோ மனிதர்! இவர் இரண்டு நினைப்பாரா? நினைப்பதுதான் நியாயமாகுமா?" என்றாள்.

"வயிறு வளர்க்க ஏதாவது ஒரு வழி வேண்டாமா, பாட்டி?" என்று கேட்டாள் வேறொரு பெண்.

"நல்ல வயிறு! இப்படி நலன்கெட்டு அப்படியாவது வயிறு வளர்க்க வேண்டுமென்று எந்த சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறதோ?" என்று கிழவி முகத்தைத் தோள் பட்டையில் இடித்துக்கொண்டு கேட்டாள்.

இம்மாதிரிப் பெண்கள் பரிகசிப்பதும் கிழவி திட்டுவதுமாக இருந்தது. வீரபல்சிங்கினால் காதுகொண்டு அவற்றைக் கேட்க முடியவில்லை. குதிரையைத் தட்டி விட்டு ஊர்வலத்துக்கு வெகு தொலைவில் போய் நின்றுகொண்டான். ஆண் பிள்ளைகள் அவமானப்படுத்தினால் நமக்கு மூக்குக்கு மேல் கோபம் வருகிறது. பெண்கள் அவமானப்படுத்தினால் வாய் அடைத்து ஓட வேண்டியிருக்கிறது!

வீரபல்சிங்குக்கு அந்தப் பெண்களிடம் வாயைக் கொடுத்துச் சிக்கிக்கொள்ள அவ்வளவு துணிவு ஏற்படவில்லை. அவனுக்குத் தன் மேலதிகாரிகளின்மீது கோபம் கோபமாக வந்தது. 'இன்னும் எத்தனையோபேர் என்னைப்போல் இல்லையா? எனக்கே இந்த வேலையைக் கொடுத்து இப்படி உயிரை வாங்குவானேன்? நான்தானா ஊருக்கு இளைத்தவன்? என்ன, எனக்கும் உணர்ச்சி என்று ஒன்று கிடையாதா?

'மிட்டன்பாய் என்னை எவ்வளவு மட்டமாகவும் பயங்கொள்ளி யென்றும் எண்ணியிருப்பாள்? என்னை இப்பொழுது யாராவது வெட்டிப் போட்டால்கூட அவள் வருத்தப்

படவே மாட்டான். அதற்கு மாறாக, 'சனியன் தொலைந்தது' என்று சந்தோஷப் பட்டாலும் படுவான். இப்பொழுது யாராவது துரையிடம் போய் வீரபல்சிங்கினுடைய மனைவியை ஊர்வலத்தில் பார்த்தேன் என்று சொல்லிவிட்டால், அப்புறம் நான் உருப்பட்டாற்போலத்தான்! இதெல்லாம் மிட்டன்பாய்க்குத் தெரியாததல்ல; தெரிந்தும் அவன் இப்படிச் செய்துவிட்டானே! என்னிடம் ஒரு வார்த்தை கேட்கக்கூட இல்லையே! நமக்கு உத்தியோகம் போய்விட்டால்?.........அவனுக்கு என் இந்தக் கவலையெல்லாம்? கவலையிருந்தால் இப்படித் தைரியமாக் வெளியே கிளம்புவானா? இந்தக் கூட்டத்திலே வந்திருக்கிறவர்களில் யார்தான் கவலைப் படுகிறவர்கள்? கல்லூரியிலும் பள்ளியிலும் படிக்கும் மாணவர்கள், தொழிலாளிகள், கூலிகள் இம்மாதிரியானவர்கள்தானே இக் கூட்டத்துக்கு வந்திருக்கின்றனர்? அவர்களுக்கு என்ன கவலை? கஷ்டப்படுகிறவர்கள் நாம்தானே? குழந்தை குட்டியுள்ளவர்களும், குல கௌரவத்தைக் கண்ணுங் கருத்துமாகக் காப்பவர்களும் அல்லவா கவலைப்பட வேண்டும். அப்பப்பா! அந்தப் பெண்கள் அப்படியே என்னை விழுங்கிவிடுவது போலல்லவா பார்த்தார்கள்!'

இம்மாதிரிச் சிந்தனையில் வீரபல்சிங் லயித்துவிட்டான். ஊர்வலம் நகரத்தின் முக்கியமான பாதைகள் வழியே முன்னேறிக் கொண்டிருந்தது.

இரு புறத்துக் கூரைகள், மாடிகள், மரங்கள் முதலியவற்றின்மீது ஊர்வலத்தைப் பார்க்க ஜனங்கள் ஏகமாகக் கூடியிருந்தனர். அவர்களுடைய முகத்தில்தான் என்ன புத்துணர்ச்சி! என்ன உற்சாகம்! என்ன கர்வம்! வயதானவர்களின் முகத்தில் உணர்ச்சியும், வாலிபர்களின் வதனத்தில் உற்சாகமும், பெண்மணிகளின் முகத்தில் அலாதிப் பெருமையும் தாண்டவமாடுவதை வீரபல்சிங் கண்டான்.

சுதந்திரப் பாதையில் முன்னேறுபவர்களுக்குத்தான் என்ன உற்சாகம் என்கிறீர்கள்! அவர்கள் தங்கள் வாழ்க்கையின் லட்சியத்தை நன்கு அறிந்திருந்தார்கள். அவர்களுக்கு வழி தப்பித் திசை கெட்டுத் திரிய வேண்டிய அவசியமே ஏற்படவில்லை. ஏனெனில் சுதந்திரத்தின் பொன்னிறச் சிகரம் தூரத்தில் வான வீதியிலே ஒளிவிட்டு பிரகாசித்துக் கொண்டிருந்தது. நடுவே கிடக்கும் காட்டாறுகளையும் காடுகளையும் லட்சியம் செய்யாமல் தாண்டி விட்டால் தொலைவிலே தெரிந்து கொண்டிருந்த சுதந்திரச் சிகரம் கிட்ட வேண்டியது தானே?

மணி பதினொன்று அடிப்பதற்கும் ஊர்வலம் ஆற்றங் கரையை அடைவதற்கும் சரியாக இருந்தது. சவம் இறக்கப்பட்டது. மக்கள் அதைக் கங்கையில் குளிப்பாட்டச் சென்றனர். இப்ராஹிம் அலியினுடைய குளிர்ந்த—சாந்தமான மஞ்சளேறிய நெற்றியில் தடியின் அடி நன்றாகத் தெரிந்தது. அடிபட்ட இடம் ரத்தம் கட்டிக் கறுப்பாயிருந்தது. தலை மயிர் ரத்தம் உலர்ந்திருந்ததனால் சித்திரக்காரனின் எழுதுகோலைப்போல ஒன்றை யொன்று ஒட்டிக் கொண்டிருந்தன. எத்தனையோ ஆயிரம் மக்கள் அந்தத் தியாகியைக் கடைசி முறையாகத் தரிசிக்கும் பொருட்டுச் சூழ்ந்து நின்றனர். வீரபல்சிங் குதிரைமீது அக் கூட்டத்துக்குப் பின்னால் நின்று கொண்டிருந்தான். அவன் கண்களுக்கும் அந்தக் காயம் தெரிந்தது. அவன் ஆத்மா அவனையே நிந்தித்தது. அவனால் சவத்தைக் கண்கொண்டு காணச் சகிக்க வில்லை. ஆகவே முகத்தைத் திருப்பிக் கொண்டான்.



எந்த மனுஷ்யனைத் தரிசிப்பதற்காக—அவனுடைய கால் தூசிகளைக் கண்ணில் ஒற்றிக் கொள்வதற்காக லட்சக் கணக்கான மக்கள் துடிதுடித்துக் கொண்டு நிற்கின்றனரோ, அப்படிப்பட்ட மகானை நாம் எவ்வளவு அவமானப் படுத்திவிட்டோம்! அன் [illegible] தாட்சண்யமின்றி நாம் அ[illegible] அடித்தோமே. அதில் கடமையை நோக்கம் சிறிதளவுகூட இல்லை; கேவலம் தன்னலம்தான் அதற்கு மூல காரணம். 'தன் சாமர்த்தியத்தைக் காட்டி ஆபீஸர்களைத்

திருப்திப் படுத்தி நல்ல பெயர் சம்பாதித்துக் கொள்ள வேண்டும் என்ற அவாதான் தன் உள்ளத்திலே முதன்மை ஸ்தானம் பெற்றிருந்தது' என்பதையும் அவனுடைய அந்தராத்மா ஒப்புக் கொண்டது. ஆயிரக்கணக்கான கண்கள் அவனைக் கோபக்கனல் வீச நோக்கிக்கொண்டிருந்தன. ஆனால் அவர்களை நிமிர்ந்து பார்க்க அவனுக்குச் சிறிதும் துணிவு ஏற்படவில்லை.

ஒரு கான்ஸ்டேபிள் அவனருகில் வந்து, "எசமான் அடித்த அடி நல்ல பலமாகத்தான் பட்டிருக்கிறது. உடைந்த மண்டை கூடவேயில்லை. ஜனங்களுக்கு இது ஒரு பாடம் தான்" என்று புகழ்ந்தான்.

"இது என்னுடைய வீரச் செயலா? அல்லவே அல்ல; என்னுடைய நீசத்தனமும், அற்பத்தனமும் இதில் நன்றாகத் தெரிகிறது" என்று அலட்சியமாகச் சொன்னான் வீரபல்சிங்.

"எசமான், போக்கிரிப்பயல் தொலைஞ்தான்!" என்று மறுபடியும் விடாமல் சொன்னான் கான்ஸ்டேபிள்.

"உஷ்! பேசாதே! போக்கிரிப்பயல் என்று யாரைச் சொல்லுவார்கள், தெரியுமா? கொள்ளை யடிப்பவர்களையும் திருடுபவர்களையும் கொலை செய்பவர்களையும்தான் போக்கிரிகள் என்று சொல்லுவார்கள். நாட்டின் நலனுக்காகத் தன்னுயிரை அர்ப்பணம் செய்யத் தயாரா யிருப்பவர்களை யாரும் போக்கிரி என்று சொல்ல மாட்டார்கள். யாருக்கு உதவி செய்ய வேண்டுமோ அவர்களை எதிர்க்கிறோமே நாம்! அதை நமது துரதிர்ஷ்டம் என்றுதான் சொல்ல வேண்டும். இது நாம் சந்தோஷப்படக் கூடிய விஷயமோ அல்லது கர்வப்படக் கூடிய விஷயமோ அல்ல. வெட்கித் தலை குனிய வேண்டிய விஷயம். நாம் செய்ததை நினைத்து அழவேண்டும்" என்று வீரபல்சிங் உணர்ச்சி வசப்பட்டுச் சொன்னான்.

ஸ்நானம் முடிந்ததும் ஊர்வலம் மறுபடியும் புறப்பட்டது.



விருந்தாளி:—ஏன் ஸார்! அந்தக் கடிகாரம் போகவே மாட்டேன் என்கிறதே! நானும் வந்ததிலிருந்து பார்க்கிறேன்.

வீட்டுக்காரர் (எரிச்சலுடன்):—ஆமாம், அந்தக் கடிகாரம் போகாது. அதனால்தான் நாங்கள் அதற்கு விருந்தாளி என்று பெயர் வைத்திருக்கிறோம்.

## 5

சவத்தைப் பூமியில் புதைத்து ஜனங்கள் வீடு திரும்பும்பொழுது மணி இரண்டு அடித்துவிட்டது. மிட்டன்பாய் மற்றப்பெண்மணிகளுடன் கொஞ்சதூரம் சென்றாள். ஆனால் 'க்வீன்ஸ் பார்க்'குக் கருகில் வந்ததும் அவள் நின்றுவிட்டாள். அவளுக்கு வீட்டுக்குப் போகவேண்டும் என்றே தோன்றவில்லை. காயம்பட்டு ரத்தம் தோய்ந்து கிடந்த அந்தச் சவத்தின் நினைவு அவள் உள்ளத்தை என்னவோ செய்தது. அவளுக்குத் தன் கணவனைப்பற்றிச் சிந்திப்பதற்கும் வெறுப்பாயிருந்தது. 'இம்மாதிரித் தன்னலக்காரர்களைக் காண மனிதர்களுக்குப் பயம்தான் ஏற்படுமேயொழிய வேறு நல்லெண்ணம் எப்படி ஏற்படும்?' என்று அவள் எண்ணினாள்.

வெகுநேரம் வரை அவள் பார்க்கில் புல் தரையில் உட்கார்ந்து ஏதோ யோசித்துக் கொண்டிருந்தாள். 'நான் என்ன செய்யவேண்டும்?' என்பதைப் பற்றி அவளால் ஒரு நிர்மாணத்துக்கும் வர முடியவில்லை. அவள் தன் பிறந்தகத்துக்குப் போய்விடலாம். ஆனால் இரண்டொரு மாதங்களுக்கெல்லாம் இதே வீட்டுக்குத் திரும்பி வந்துதானே ஆவேண்டும்? 'இல்லை, நாம் பிறரிடம் தஞ்சம் புகுவானேன்? நாம் நம் வாழ்க்கைக்கு வேண்டியதை எப்படியாவது மானமாகச் சம்பாதித்துக் கொள்ள முடியாதா?' என்று எண்ணினாள். அவள் என்னென்ன கஷ்டங்கள் ஏற்படக் கூடும் என்பதையும் கற்பனை செய்து பார்த்தாள். ஆனால் அன்றைக்கென்று அவ













ளுடைய ஆத்மாவுக்கு எங்கிருந்துதான் பலம் வந்ததோ, தெரியவில்லை. இந்தக் கஷ்டங்களையெல்லாம் கற்பனை செய்து பார்ப்பதே அவளுக்குப் பலவீனமாகத் தோன்றியது.

அடுத்தகணம் அவளுக்கு இப்ராஹிம் அலியின் மனைவி — கிழவியின் நினைவு வந்தது. அவளுக்குக் குழந்தை குட்டிகள் இல்லையென்று அவள் கேள்விப்பட்டிருந்தாள். பாவம், அவள் தனிமையில் உட்கார்ந்து அழுது கொண்டிருப்பாள். அவளுக்கு ஆறுதல் சொல்ல யாரும் இருக்க மாட்டார்கள். இதை எண்ணியதும் அவள் இப்ராஹிம் அலியினுடைய வீட்டுக்குப் புறப்பட்டாள். அவருடைய வீட்டு விலாசத்தை அவள் முன்பே கேட்டுத் தெரிந்து கொண்டிருந்தாள். 'அந்தக் கிழவியை நாம் எப்படிப் பார்ப்பது? என்ன பேசுவது? எப்படி ஆறுதல் சொல்லுவது?' என்றெல்லாம் மனதில் யோசித்தவாறே அவள் சென்றாள்.

இப்ராஹிம் அலியின் வீடு ஒரு சின்னத் தெருவில் இருந்தது. கச்சிதமான சின்ன வீடு. ஆனால் அன்று அந்த வீட்டு வாசலில் ஒரு கலகலப்பே இல்லை. அவள் பயந்தவாறே அந்த வீட்டினுள் காலடி எடுத்து வைத்தாள். எதிரே வராந்தாவில் ஒரு கிழவி உட்கார்ந்திருந்தாள். அவளுடைய கணவர்தான் இன்று சுதந்திரத் தீயில் குதித்துத் தன்னுயிரைத் தியாகம் செய்திருந்தார். அவள் எதிரிலேயே ஒரு வாலிபன் கண்ணீரும் கம்பலையுமாக நின்று கொண்டு ஏதோ பேசிக்கொண்டிருந்தான். மிட்டன்பாய் அந்த வாலிபனைப் பார்த்ததும் திடுக்கிட்டாள். அவன் வேறு யாரும் இல்லை; அவளுடைய கணவனான வீரபல்சிங்தான்!

அவள் கோபமும் வியப்பும் தாண்டவமாட "நீங்கள் இங்கே எங்கே வந்தீர்கள்?" என்று கேட்டாள்.

"நீ இங்கே ஏன் வந்தாய்? அதைப் போலத்தான் நானும் வந்தேன்; என் குற்றத்துக்கு மன்னிப்புக் கேட்பதற்காக" என்றான் வீரபல்சிங்.

மிட்டன்பாயின் முகத்தில் அப்பொழுது வீசிய ஒளியையும், மகிழ்ச்சியையும், அன்பையும் சொல்லி முடியாது. அவளுக்குத் தன்னுடைய ஜன்ம ஜன்மாந்தரத்துக் கிலேசமே ஒழிந்து கவலை, மாயை என்னும் கட்டிலிருந்து தான் விடுபட்டுச் சுதந்திரமடைந்து விட்டது போலவும் தோன்றியது.

# காகிதத் திட்டம் கைகூடுமா?

ரஜனி

கொழும்பு, மே, 15உ.

இலங்கையைக் கைத்தொழில் மயமாக்குவது பற்றி கொஞ்ச காலமாக எங்கும் பேச்சாயிருந்து வருகிறது. இதற்கு ஒவ்வொரு மந்திரியும் பல கோடி ரூபாய் செலவாகக் கூடிய திட்டங்களை ஏட்டில் எழுதி வெளியிட்ட வண்ணமாக இருந்து வருகின்றனர். முத்துராஜவெலை ஏரியையும் வட இலங்கைக் கடல் ஏரியையும் அணை போட்டுத் தடுத்துச் சுத்த ஜல ஏரிகளாக்கிப் பல லட்சம் ஏகரா விஸ்தீரணமுள்ள நிலங்களில் நெல் சாகுபடி செய்யத் திட்டமிட்டிருக்கிறார்கள். ஏற்கெனவே பல லட்ச ரூபாய்களைச் செலவிட்டு ஆயிரக் கணக்கான சிங்களக் குடியானவர்களைக் குடியேற்றிய மின்னேரியா திட்டத்தில் லட்சம் ரூபாய்க்கு ஒரு மூட்டை நெல் வீதம்கூட விளையக் காணோம்! குடியேற்றிய சிங்களவர்களில் நூற்றில் ஒருவர்கூட இப்பொழுது அங்கில்லை. இதற்குக் காரணம் திட்டத்தின் குறையல்ல. அதில் வேலை செய்பவர்களுக்கு உண்மையான ஊக்கம் இருந்தால்தானே? கிஜாரும் பூட்சும் தொப்பியும் அணிந்து கொண்டு நெல் வயல்களில் வேலை செய்வதென்றால் அந்த வயல்களில் எவ்வளவு பலன் கிடைக்கும் என்று சொல்லுவதற்கு ஜோஸ்யமா பார்க்கவேண்டும்!

செயற்கை உரம் உற்பத்திச் சாலை, சீனி உற்பத்திச் சாலை, ஜவுளி ஆலைகள், ரப்பர் சாமான்களை உற்பத்தியாக்கும் தொழிற்சாலைகள், அலுமினியக் காகித உற்பத்திச் சாலை, எஃகுத் தொழிற்சாலை, முதலான பெரிய பெரிய கைத்தொழில்களை யெல்லாம் இலங்கையில் ஆரம்பித்து நடத்த மந்திரிகள் திட்டங்களை வெளியிட்டிருக்கிறார்கள். கைத்தொழில்களை நடத்தும் விஷயத்தில் இலங்கை அரசாங்கத்தின் திறமை ஏற்கெனவே அதனால் நிர்வகிக்கப்படும் தொழிற்சாலைகள் வேலை செய்யும் லட்சணத்திலிருந்து நன்றாகத் தெரிந்திருக்கின்றது! இதை உத்தேசித்தே அலுமினியக் காகித உற்பத்திச் சாலை, மோட்டார் டயர் உற்பத்திச் சாலை ஆகியவற்றை இலங்கையர்களுடைய மூலதனத்தையும் இலங்கையரல்லாதார்களுடைய, மூலதனத்தையும் கொண்டு தனிப்பட்ட கம்பெனிகளைப் போல ஆரம்பித்து நடத்த மந்திரி ஸ்ரீ ஜி. ஜி. பொன்னம்பலம் ஏற்பாடு செய்திருக்கிறார். இவ்விரு தொழிற்சாலைகளும் சுமார் ஒரு வருஷ காலத்துக்குள் வேலை செய்ய ஆரம்பித்து விடலாம்.

## தொழிலாளர் துயரம்

தோட்டங்கள் லாபகரமாக வேலை செய்யவில்லை யென்றும் தொழிலாளர்களை 'டிஸ்மிஸ்' செய்யப் போவதாயும் சொல்லி வந்த ஐரோப்பியத் தோட்ட முதலாளிகள் தங்களுடைய பயமுறுத்தலைக் காரியத்திலேயே செய்து காட்ட ஆரம்பித்து விட்டார்கள். இம்மாதம் முதல் தேதியிலிருந்து

சிந்து நதி இன்னும் 20 வருடங்களில் தனது போக்கை மாற்றிக் கொண்டு இந்தியாவிற்குத் திரும்பி விடும் என்றும் அதைத் தடுப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்தாக வேண்டும் என்றும் பாகிஸ்தானிலுள்ள நிபுணர்கள் கருதுகின்றனர்.

—கராச்சி செய்தி

பாகிஸ்தான் சர்க்காரின் போக்கு பிடிக்காமல் வெளியேறிய அகதி கோஷ்டியுடன் சிந்து நதியையும் சேர்க்க வேண்டியதுதான்!

★

சென்னை மாகாண இரும்பு வியாபாரிகள் மகாநாடு: கண்ட்ரோல்களை நீக்க முறையிடு.

—தலைப்பு

கண்ட்ரோல்கள் விஷயத்தில் இன்னும் கொஞ்ச காலத்துக்கு இரும்புப் பிடியாகத்தான் இருந்தாக வேண்டும் என்பது பொதுஜன அபிப்பிராயம்.

மூவாயிரம் ரப்பர் தோட்ட இந்தியத் தொழிலாளருக்கு வேலையுமில்லை, கூலியுமில்லை. திக்கற்றவர்களாகத் தவிக்கும் அவர்களை இலங்கை அரசாங்கம் கவனிப்பதாயுமில்லை. யுத்த காலத்தில் கொள்ளை லாபம் சம்பாதித்தவர்கள் இப்போது தொழிலாளரை விரட்டியடிப்பது என்ன நியாயம்?

இத்தகைய நெருக்கடி ஏற்படுவதைத் தடுக்க முன் கூட்டியே பல யோசனைகளைச் சொல்லியும் தோட்ட முதலாளிகளின் செவியில் எதுவும் ஏறவில்லை. அதைத் தவிர, தேயிலைத் தோட்டங்களிலும் தொழிலாளரைக் குறைக்கப் போகிறோமென்று முதலாளிகள் கூறுவதாக இலங்கை இந்தியர் காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ கே. ராஜலிங்கம் ஒரு கூட்டத்தில் சொன்னார். தொழிலாளர் இவ்விதம் வேலையிலிருந்து தள்ளப்படுவதால் அவர்களுடைய பிழைப்புக்கு ஆபத்து ஏற்படுவதோடு அவர்கள் பிரஜா உரிமை பெறுவதும் தடைப்படுகிறது. தோட்டத் தொழிலாளர் நிலைமையைப் பற்றி ஆராய்வதற்காக 'லேபர் கமிஷனர்' சென்ற வாரம் ஒரு மகாநாடு கூட்டினார். அந்த மகாநாட்டில் வேறு பல விஷயங்களைப் பற்றியெல்லாம் பேசிவிட்டு ரப்பர் தோட்ட ஆள் குறைப்புப் பிரச்னையை மட்டும் ஒத்தி வைத்துவிட்டார்!

## ஹை கமிஷனர் முயற்சி

இலங்கையிலிருந்து வெளியே ஒரு சதம் அனுப்புவதாயிருந்தாலும் அசாத்தியமான பல நிபந்தனைகளைப் பூர்த்தி செய்ய வேண்டுமென்று செலாவணி லோகா புதிய உத்தரவுகளைப் பிறப்பித்தபொழுது, இலங்கை அரசாங்கத்தைவிட இந்திய ஹை கமிஷனரையே இங்குள்ள இந்தியர்கள் அதிகம் கண்டித்தார்கள். இந்தியர்களின் நன்மையைக் கவனிக்க முடியாவிட்டால் ஒரு ஹை கமிஷனரும் இரண்டு காரியதரிசிகளும் அவர்களுக்கு ஒரு பெரிய காரியாலயமும் இங்கு எதற்காக என்று இந்தியர்கள் கேட்டார்கள். இந்திய சர்க்காரின் சார்பாகச் செலாவணி உத்தரவுகளைக் கடுமையாக ஆட்சேபித்து ஹை கமிஷனரின் காரியதரிசி ஸ்ரீ என். இ. எஸ். ராகவாச்சாரி இலங்கை அரசாங்கத்துக்கு இப்பொழுது ஒன்றன்பின் ஒன்றாகப் பல கடிதங்களை அனுப்பிக் கொண்டிருக்கிறார். இலங்கையிலுள்ள இந்தியர்களை ஒரு விதமாகவும் ஐரோப்பியர்களை வேறு விதமாகவும் நடத்துவது அக்கிரமம் என்பதையும் அவர் தமது கடிதங்களில் இடித்துக் காட்டியிருக்கிறாராம். அவருடைய யோசனைகளை இலங்கை அதிகார வர்க்கம் ஏற்றுக் கொள்ளுமா?

# சாதுவாயிற்று!



பிரிட்டிஷ் சிங்கம் பழக்கப்பட்டுப் பரம சாதுவாகி விட்டது என்று அ. இ. கா. கமிட்டிக் கூட்டத்தில் பண்டித ஜவஹர்லால் நேரு கூறினார்.

# வட்ட மேஜை

## நிம்மதி உண்டா?

சென்ற மே மாதம் 22-ம் தேதி 'கல்கி' இதழில் 'நிம்மதி இல்லை' என்ற தலைப்புடன் வெளி வந்த கடிதத்தைப் படித்தேன். '''உங்களைக் கலியாணம் பண்ணிக்கொண்டு நான் என்னத்தைக் கண்டேன்! ஒரு தேரா, திருவிழாவா, ஒரு சினிமாவா, ஒரு கச்சேரியாவது பார்த்ததுண்டா?' என்று சலித்துக் கொள்வாள். இந்த நிலைமையில் நிம்மதி ஏது பத்திரிகையாளருக்கு?'' என்ற வரிகளைப் படித்ததின் காரணமாக இதை எழுதுகிறேன். பத்திரிகையாளருக்கு நிம்மதி இல்லைதான். ஆனால் அவர்களின் மனைவியருக்கு மட்டும் நிம்மதி உண்டா?

● என் கணவரும் ஒரு தினப் பத்திரிகையில் வேலை பார்ப்பவர்தான். எல்லோர் வீட்டிலும் புருஷர்கள் ஆபீசுக்குப் போகும் சமயம் இவர் வீட்டில் இருப்பார். எல்லோரும் வீடு திரும்பும் சமயம் இவர் காரியாலயத்துக்குப் போவார். சாயங்காலம் எல்லோர் வீட்டிலும் காற்று வாங்க வெளியே போவார்கள். அப்பொழுதுதான் இவர் காரியாலயத்தில் மும்முரமாக வேலை செய்துகொண்டிருப்பார். இந்த அழகில் அடிக்கடி 'நைட் ஷிப்ட்' வேறு வந்துவிடும். பகலெல்லாம் வீட்டிலே இருந்து தொண தொணத்துவிட்டு ராத்திரி எட்டு மணிக்கு வேலைக்குப் போவார். ராத்திரியில் புருஷர்கள் வீட்டில் இல்லாவிட்டால் நமக்குத் தூக்கம் வருகிறதா? அர்த்த ராத்திரியில் அவர் திரும்பும் வரையில் கொட்டுக் கொட்டென்று விழித்துக்கொண்டு உட்கார்ந்திருக்க வேண்டும். இரவு பன்னிரண்டு மணிக்கோ, இரண்டு மணிக்கோ நாலு மணிக்கோ எப்பொழுதாவது அவர் வீடு திரும்புவார். ராத்திரி எல்லாம் கண் விழித்து வேலை செய்துவிட்டு வந்திருக்கிறாரே என்று அவேளையில் அடுப்பை மூட்டி 'ஓவல்டின்' கரைத்துக் கொடுப்பதும் இலேசான காரியமா? நிற்க.

அவர் வந்த பிறகாவது நிம்மதியாய்த் தூங்கலாம் என்றால் முடிகிறதா? காரியாலயத்தில் அன்று நடந்த பெரிய காரியங்களை அவர் வெகு எளிதாகச் செய்துவிட்டதாயும், அவருடன் வேலை செய்பவர்கள் செய்ய முடியாமல் திணறிய சில வேலைகளை இவர் செய்து புரட்டிவிட்டதாகவும் அப்பொழுது சுவாரஸ்யமாகச் சொல்ல ஆரம்பிப்பார். பத்திரிகைத் தொழிலைப் பற்றிப் பேசினால் யாருக்குப் புரிகிறது? புரியுமானால் நாமே பத்திரிகைத் தொழிலில் ஈடுபடலாமே! ஏதோ சொல்கிறாரே என்று கேட்டு வைக்கவேண்டும். இதெல்லாம் போதாதென்று கட்டுரை எழுதுவதற்கு விஷயம் சேகரிப்பதற்காகக் கண்ணில் கண்ட பத்திரிகைகளை எல்லாம் துண்டு துண்டாக வெட்டி எடுத்து வீடெல்லாம் குப்பை பண்ணுவார். வெட்டினது போக மீதிப் பத்திரிகைகள் வீடு நிறையத் தோரணம் தோரணமாகக் குவிந்து கிடக்கும். பேப்பர்க்காரனுக்குப் போடவும் உபயோகமில்லை. வீடு கூட்டி வேலை செய்பவன் வேறு ''என்னம்மா, இந்த ஐயா இப்படி பக்கைப்பின்னே மாதிரி குப்பை போடுகிறாரே' நான் இரண்டுதரம்தான் கூட்டுவேன். அப்புறம் வேணுமானால் நீ தான் கூட்டணும்'' என்கிறான். தெருக் கூட்டுகிறவளோ, ''உங்க வீட்டிலே மட்டும் எப்படித் தினம் இவ்வளவு குப்பை விழுகிறது?'' என்று அதட்டுகிறாள். இவ்வளவு தொல்லைகளிருந்தும் ஒரு நாளாவது விடுபடுவதற்கு வகையில்லாவிட்டால் ''உங்களைக் கல்யாணம் செய்து கொண்டு நான் என்னத்தைக் கண்டேன்!'' என்று கேட்காமல் என்ன செய்வது?

பம்பாய்
24—5—49 ஸாந்த்ரா நாராயண்

○ ● ○

## கண்டிராக்டர்கள் தொல்லை

சேலம் ஜில்லா, வேலூரில் காவிரியாற்றில் புதிதாகக் கட்டப்படும் பாலத்திற்கு அஸ்திவாரக்கல் நாட்டு விழா நடந்தபோது நமது சென்னை மாகாண மராமத்து இலாகா மந்திரி கனம் பக்தவத்சலம் செய்த பிரசங்கத்தின் ஒரு பகுதி கீழே தரப்பட்டிருக்கிறது.

''......1000 திட்டங்கள் சுமார் 6 கோடி ரூபாயில் நடத்தவேண்டியிருக்கிறது. முக்கியமான தடை என்னவென்றால் இன்ஜினியர்கள் இல்லாமைதான். அதனால் பல வேலைகள் எடுத்துக்கொள்ள முடியவில்லை. ஆனால் எல்லா வேலைகளையும் மராமத்து இலாகாக்களிலேயே செய்யமுடியாது. இன்ஜினியரிங் கண்டிராக்டர்கள் தேவை......'' இதேபோல நமது மந்திரி அவர்கள் ஒருதடவை 'கல்கி' இதழில் ''மராமத்தும் கண்டிராக்டும்'' என்ற கட்டுரையில் எழுதியிருந்தார்.

ஒருவர் இப்பொழுது சர்க்கார் இன்ஜினியர் ஆகவேண்டுமென்றால் சர்க்கார் கேட்கும் நிபந்தனைகளைப் பூர்த்தி செய்ய வேண்டும். அவர் சர்க்கார் இன்ஜினியரிங் கல்லூரியின் 'டிக்ரி' பெற்றவராகவோ அல்லது சர்க்காரால் அங்கீகரிக்கப்பட்ட 'இன்ஸ்டிட்யூட்'களிலிருந்து 'டிப்ளோமா' வாங்கியவராகவோ இருக்க வேண்டும். என்னைப் பொறுத்தவரை சொல்கிறேன்: நான் எஸ். எஸ். எல். ஸி. வரை படித்திருக்கிறேன். ஒரு பெரிய இன்ஜினியரிங் கண்டிராக்டருடைய கம்பெனியில் சுமார் 11 வருஷம் வரை சூபர்வைசராக வேலை பார்த்திருக்கிறேன். அமெரிக்கா, இங்கிலாந்து போன்ற நாடுகளிலுள்ள இன்ஜினியரிங் இன்ஸ்டிட்யூட்களிலிருந்து 'டிப்ளோமா'க்கள் வாங்கியிருக்கிறேன். ஒரு பி. இ. பரீட்சை பாஸ் செய்தவருடைய திறமையைக் காட்டிலும் பத்து பங்கு அதிகத் திறமையுடன் வேலை செய்யக்கூடிய அறிவு, எனது அனுபவத்திலிருந்து எனக்குக் கிடைத்திருக்கிறது. இருந்தும் என்ன பயன்? நான் சர்க்கார் சூபர்வைசராகவோ இன்ஜினியராகவோ ஆக முடியாத நிலைமையில் சர்க்கார் 'ஜி. ஓ.'க்கள் இருக்கின்றன.

என்னைப்போன்ற எவ்வளவோ பேர்கள் இந்த நிலையில் இருந்து வருகிறார்கள்.

நமது நாட்டில் பல ஆயிரம் வருடங்களுக்கு முன் கட்டப்பட்டிருக்கும், கற்பனைக்குக்கூட எட்டாத அற்புதமான கட்டிடங்களும் கோயில்களும் கோபுரங்களும் இன்னமும் சிரஞ்சீவிகளாக இருந்து வருகின்றன. அவற்றைக் கட்டியவர்கள் பி. இ. பாஸ் செய்தவர்கள் அல்ல. நமது மராமத்து இலாகா இவைகளை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு. வழிகளைக் கைக்கொண்டால். இன்ஜினியர்கள் பஞ்சம் பஞ்சாகப் பறக்கும்.

மராமத்து இலாகாவிற்குக் கண்டிராக்டர்கள் கிடைக்கவில்லை என்று கனம் மந்திரி சொல்லுகிறார். ஆனால் தென் இந்திய ரயில்வேயில் 'இன்ஜினியரிங் டிபார்ட்மென்டில்' கண்டிராக்டர்கள் கிடைக்கவில்லை என்று யாராவது சொல்லியிருக்கிறார்களா? சொல்லியிருக்க முடியாது. காரணம் என்ன என்றால் அது ஒரு தேவரகசியம். சாதுக்களாகவும் நேர்மையுள்ளவர்களாகவும் உள்ள இன்ஸ்பெக்டர்கள், இன்ஜினியர்கள், தென் இந்திய ரயில்வேயில் இருக்கிறார்கள். அதே சமயத்தில் மனச்சாட்சி என்பது எங்கே விற்கப்படுகிறது என்று கேட்கக் கூடிய சில கண்டிராக்டர்களும் இருந்து வருகிறார்கள். இந்த இன்ஜினியரிங் கண்டிராக்டர்கள் வைத்ததுதான் சட்டம். இவர்கள் வேலை செய்யக் கூடிய 'செக்ஷன்கள்' தங்களுடைய 'பிதுரார்ஜித' சொத்து என்ற எண்ணம் இவர்களிடம் குடிகொண்டிருக்கிறது. ஒரு சமயம் ஒரு செக்ஷனில் கண்டிராக்டர்களுக்குள் பலத்த போட்டி ஏற்பட்டு விட்டால் கொள்ளை லாபம் தடைப்படும். உடனே மத்தியஸ்தர் ஒருவர் வருவார். ஒரு கள்ள மார்க்கட் ஒப்பந்தம் ஏற்பட்டுப் போட்டி மறைந்து விடும். ஒரு சிறு வேலைசெய்ய ரூ. 135 ஆக இருந்த 'ரேட்' ரூ. 180 ஆக விஷம்போல ஏறிவிடும். இந்த நிலையில் புதிய கண்டிராக்டர்கள் ஒருவரும் தலைதூக்க முடியாது.

மழைக் காலங்களில் ரயில்வே லயனில் உடைப்பு வந்துவிட்டால், இந்தக் கண்டிராக்டர்கள் பாடு கொண்டாட்டம். ரயில்வே லயனில் மழைக் காலங்களில் உடைப்பு ஏற்பட வேண்டும் என்று சில கண்டிராக்டர்கள் தெய்வங்களை வேண்டிக் கொண்டிருப்பார்கள்! லயனில் உடைப்பு ஏற்பட்டு விட்டால் கண்டிராக்டர்கள் இரும்புப் பெட்டி நிறைந்துவிடும். உடைப்பு ஸ்தலங்களில் 200 ஆட்கள் வேலை செய்தால் 2000 ஆட்கள் வேலை செய்தார்கள் என்று 'பில்' தருவார்கள். ஆனால் சென்ற இரண்டு வருஷங்களாக ரயில்வே லயனில் உடைப்பு ஒன்றும் பிரமாதமாக ஏற்படவில்லை. ஏன்? மழை இல்லை. ஆண்டவன் இந்த ஒரு சில பேராசைக் கும்பல்களின் வாயில் மண்ணைப் போட்டுவிட்டார்!

மேலே சொல்லப்பட்ட சலுகைகள் மராமத்து இலாகாவில் இல்லை. ஆகவே கண்டிராக்டர்கள் கிடைப்பது கஷ்டந்தான்.

பழநி
20—5—49 வி. எஸ். மணி

○●○

## மாறுவேடத்தில் மந்திரி

9-5-49 'ஹிந்து' பத்திரிகையில் இந்திய சர்க்கார் தபால் தந்தி இலாகா மந்திரி ஸ்ரீ ரபி அகமத் கித்வாய் அவர்கள் கல்கத்தா ஜெனரல் போஸ்ட் ஆபீஸில் ஒருவருக்கும் தெரியாமல் காலை 10 மணிக்கு விஜயம் செய்து அங்கு நடக்கும் வேலைகளைப் பற்றிய விவரங்களை அறிந்து வந்தாராம். கடைசியில் பார்சல் அனுப்பும் இலாகாவில் நுழைந்து பார்வையிடும்பொழுது அவரைப் பார்சல் கட்டுபவர்களில் ஒருவர் கண்டு பிடித்து மேல் அதிகாரிகளுக்குத் தெரிவிக்க அவர்கள் ஓடோடியும் வந்து ஸ்ரீ கித்வாய் அவர்களை வரவேற்றார்கள் என்ற செய்தி பிரசுரமாகியிருந்தது.

முன்பு ஒருமுறை "கல்கி" இதழின் தலையங்கத்தில், "மந்திரிகள் மாறுவேஷம் போட்டுக்கொண்டு குற்றம் குறைகளைக் கண்டு பிடித்து நிவர்த்திக்க வேண்டும்" என்று எழுதியிருந்ததைப் பிரதிபலிப்பதுபோல் இருந்தது மந்திரியின் செய்கை. இதைப்போல் நமது சென்னை சர்க்கார் மந்திரிகளும் செய்வார்களா?

திருநெய்த்தானம்
21—5—49 எம். கே. சீனிவாசன்

○●○

## தங்கம் இறக்குக!

3—4—49 "கல்கி" இதழில் "நாடு செழிக்காதோ? நல நாள்யாம் கொழிக்காதோ?" என்ற தலையங்கத்தைப் படித்தேன். அதில் கண்டிருந்த சில அரிய விஷயங்களை அறிந்தேன்.

தங்க இறக்குமதி செய்தால் அது நம் நாட்டிற்கு ஒரு சமயத்தில் இல்லாவிட்டால் இன்னொரு சமயம் உதவும் என்பது நிச்சயம். உதாரணமாக இங்கு மலாய் நாட்டில் ஜப்பானியர்கள் ஆட்சி செலுத்திய சமயத்தில் கடுமையான பஞ்சம் ஜனங்களை வதைத்தது. அச்சமயத்தில் கப்பல் போக்குவரத்து மிகக் கடுமையான விதிகளின் காரணமாக மிகக் குறைவாக இருந்தது. மலாயாவில் அரிசிப் பஞ்சம்தான் மிகக் கடுமையாயிருந்தது. அச்சமயம் சயாமில் அரிசி ஏராளமாக இருந்தது. மலாயாவில் ஜப்பானியர் ஆட்சியில் வழங்கிய நாணயச் செலாவணி நோட்டு

கட்சிகாரர்:—என் கேஸ்களை யெல்லாம் தங்கள் தகப்பனாரிடம் நடத்திவந்தேன். அவர் காலம் ஆகிவிட்டது. பிறகு தங்கள் தமையனாரிடம் நடத்திவந்தேன். பாவம், அவர் காலமும் ஆகிவிட்டது. இப்பொழுது உங்களை விட்டுவிடக் கூடாது என்று உங்களிடமே வந்திருக்கிறேன்!"

களுக்குச் சயாம் சர்க்கார் அரிசி கொடுக்க மறுத்துவிட்டனர். பிறகு தங்கத்துக்கு மாற்றிக்கொள்ளலாம் என்று தெரிவித்தனர்.

உடனே மலாயாவிலுள்ள தங்கத்தைத் திரட்டிச் சயாம் சர்க்காரிடம் கொடுத்து அரிசி வாங்கினர். அச்சமயத்தில் தங்கம் கொடுத்திராவிடில் நமது இந்தியர்களின் பெருந்தொகை குறைந்திருக்கும். ஏனென்றால் மலாயாக்காரர்களாலும் சீனர்களாலும் கிழங்கு வகைகளைச் சாப்பிட்டு உயிர்வாழ முடிந்தது. இந்தியர்களால் கிழங்கு வகையைச் சாப்பிட்டு உயிர்வாழ முடியவில்லை. அன்று ஏழை இந்தியர்கள் பசியால் வாடி இறந்ததை இன்று நினைத்தாலும் மனம் கலங்குகிறது. ஆனால் கடைசியில் தங்கத்தின் உதவியால் இந்தியர்கள் பசிப் பிணியினின்று காப்பாற்றப் பட்டனர். நம்முடைய தாய்நாட்டிலும் ஓரளவு தங்கம் இருந்தால் சமயத்தில் உதவும் என்பது நிச்சயம்.

மலாயா
26—3—49 ச. கோவிந்தராஜன்

○●○

## வண்டியில் தண்ணீர்

மதுரை, திண்டுக்கல், திருநெல்வேலி முதலிய ஜங்ஷன்களிலிருந்து புறப்படுகின்ற ஷட்டில் டிரெயின்களில் முன்பெல்லாம் (அதாவது 1939-க்கு முன்) பெட்டிகளில் தண்ணீர் கிடைக்கும். தற்சமயம் ஏதாவது ஒரு வண்டியில் தப்பித் தவறித் தண்ணீர் இருந்தால் அது நாம் செய்த புண்ணியவசத்தால்தான் என்று எண்ணவேண்டியிருக்கிறது. மேற்படி குறையை ரயில்வே மானேஜ்மெண்டார் கவனிக்கவில்லை என்று அர்த்தமா? அல்லது அதற்கென்று ஏற்பட்ட தொழிலாளிகள் சுதந்திர சர்க்காரில் மேற்படி வேலைகளைச் செய்யக்கூடாது என்று எண்ணுவதினாலா? எனினும் இந்தக் குறையை ரயில்வே மானேஜ்மெண்டார் கவனித்து மூன்றாம் வகுப்புப் பிரயாணிகளுக்குச் சௌகரியம் செய்து தரவேண்டியது அவசியம்.

ஆத்துக்குடி
21—5—49 பி. ஆர்.

○●○

## கள்ளர்கள் கதை!

''சமுதாய விரோதி'' என்ற கதையைப் படித்தேன். ஸ்ரீ விந்தன் ''சமுதாய விரோதி''யின் மூலம் கள்ளுக்கடை எடுக்கப்பட்ட பிராந்தியங்களில், தற்போது ஒரு சில இடங்களில் நடக்கும் திருட்டுச் சாராயம் காய்ச்சுதல், அதனால் ஏற்படக்கூடிய அநாகரிகமான காட்சிகள் முதலியவற்றைத் தத்ரூபமாய் நம் மனக்கண் முன்னால் கொண்டு வந்து விட்டார்.

நாட்டின் நலத்திற்கும் ஏற்றத்திற்கும் உற்றதாகவுள்ள சட்டங்களின் வரம்பை மீறுகிறவர்கள் யாவரே ஆயினும், தன் தந்தையாயிருப்பினும் தயவின்றி காட்டிக் கொடுக்க அஞ்ச வேண்டியதில்லை என்றும், நியாயத்தை நல்லவர்கள் நாடுவார்கள் என்றும், நாட்டின் நலனை எல்லோரும் போற்றவேண்டும் என்றும் பல அரிய பெரிய தலைவர்கள் போற்று இவர்கள் என்றும், பசுமரத்தாணி போல் தீட்டியுள்ளார் நம் விந்தன்.

ஹைதராபாத்
21—5—49 ஆர். ஜி. ஜகந்நாதன்

○●○

## முக ஒற்றுமை

''கல்கி''யில் வெளியாகும் தங்கள் 'அலை ஓசை'யை ஆரம்பம் முதல் விடாமல் படித்துக் கொண்டு வருகிறேன். கதையின் போக்கு மிகவும் நன்றாகவும் மேற் கொண்டு நடக்கப் போகும் நிகழ்ச்சியை அறிவதில் மிகவும் ஆவல் ஊட்டுவதாகவும் இருக்கிறது.

சென்றவார இதழைப் படித்தவுடன் சந்தேகம் ஒன்று எழும்பியுள்ளது. தாரிணியானவள் கங்காபாயின் புதல்வி, சீதாவோ ராஜம்மாளுக்குப் பிறந்த குழந்தை. ஆனால் கதையில் நடந்த சம்பவங்கள் பிரகாரம் சீதாவிற்கும் தாரிணிக்கும் முக ஒற்றுமை இருக்கிறது என்றும் அதனால்தான் சீதா தாரிணிக்குப் பதிலாக ஆளாகிக் கொல்லப்பட்டாள் என்றும் தெரியவருகிறது. தாரிணியும், சீதாவும் வெவ்வேறானவர்களுடைய பெண்களாக இருந்த போதிலும் அவர்களிடையே இரட்டைக் குழந்தைகள் போன்ற முக ஒற்றுமை இருக்கக் காரணம் என்ன என்றுதான் விளங்கவில்லை. இது சம்பந்தமாக உங்கள் பதிலை ''வட்ட மேஜை'' மூலமாக எதிர்பார்க்கிறேன்.

திருச்சிராப்பள்ளி
26—5—49 ஜி. கிருஷ்ணன்

[''அலை ஓசை'' தொடர் கதையைப்பற்றி இந்தமாதிரி ஐயங்களுக்கு உள்ளாகும் நேயர்களைத் தயவுசெய்து கதை முடியும் வரையில் பொறுத்திருக்கும்படி கோருகிறோம். கதை முடிவதற்குள்ளே சகல சந்தேகங்களும் தீர்ந்துவிடும். —ஆசிரியர்]

○●○

## ★ ஏன் மறந்தீர்கள்?

''கல்கி'' புஸ்தகம் வாரா வாரம் வாங்குவது போல் இந்த வாரமும் (22-ந் இதழ்) வெள்ளிக்கிழமை அன்றே மத்தியானம் 2-30 மணிக்கு வாங்கி வாசித்தேன். சௌபாக்கியவதி ஆனந்தி சிரஞ்சீவி ராமச்சந்திரன் இவர்களுடைய திருமண விழா விமரிசையை ஆசையுடனும் அன்புடனும் குதூகலத்துடனும் படித்தேன். கனம் ராஜாஜீ, கனம் பவநகர் மகாராஜா இன்னும் பல பிரமுகர்களும் வந்திருந்தார்களே! ஆனால் இந்தச் சிறு பயல், விஷமக் கொடுக்கு, பாப்பா மலர் படிக்கும் தேசிகனுக்கு மாத்திரம் அழைப்பு அனுப்பாமல் மறந்துவிட்டீர்களே, மாமா!

மாம்பலம்
24—5—49 கே. ஆர். தேசிகாச்சாரி

[சிரஞ்சீவி விஷமக் கொடுக்கு தயவு செய்து மன்னிக்கவும்! அழைப்பு அனுப்பாததற்கு அபராதமாக ரூ. 12—8—0 அனுப்பி யிருக்கிறோம். —ஆசிரியர்]

---

★ வட்ட மேஜைப் பரிசுத் தொகை ரூ. 25-ஐ 'நிம்மதி உண்டோ?' என்ற கடிதம் எழுதிய பம்பாய் ஸ்ரீமதி சாந்தா நாராயணனுக்கும், 'ஏன் மறந்தீர்கள்?' என்ற கடிதம் எழுதிய மாம்பலம் கே. ஆர். தேசிகனுக்கும் ரூ. 12-8-0 வீதம் பிரித்து வழங்கப்பட்டது.

# ஆஸ்துமா சளி ஒரே நாளில் அகற்றப்படுகிறது

மெண்டாகோ கண்டு பிடிக்கப்பட்டது முதல் மூச்சுத் திணறி, சுவாச இழுப்புடனும் ஆஸ்துமாவினால் யாரும் அவதியுற வேண்டாம். மெண்டாகோவை உபயோகித்தால் இன்ஜக்ஷனும் கெடுதலான புகையும் வேண்டாம். ருசியற்ற இரு மெண்டாகோ மாத்திரைகளை ஆகாரத்துடன் சாப்பிட்ட 10 நிமிஷத்தில் உடலிலுள்ள சளி உடனேயே கரைகிறது. சுலபமாக மூச்சு விடலாம் நரம்புகளுக்கு விச்ராந்தி சுவாசப் பைக்கு நன்மை. விருவிருப்பு ஏற்படும்.

## சிசுவைப்போல் அயர்ந்த நித்திரை

ஆஸ்துமாவினால் அவதியுறும் ஆயிரக்கணக்கானவர்கள் முதன் முதலில் மெண்டாகோவை உட்கொண்டு சுகமடைந்தனர், இரவே ஆழ்ந்து நித்திரை செய்தனர் என்றும் கூறுகின்றனர். திட ஆரோக்கியமாகவும் 5 முதல் 10 வருஷம் இளமை யடைந்ததாகவும் உணர்ந்தனர். காரணம் ஆஸ்துமாவினால் ஏற்படும் இடையூறுகளை மெண்டாகோ இயற்கையில் தவிர்க்கிறது. (1) சளியையும் கோழையையும் இளக்குகிறது. (2) சுவாச மார்க்கத்திலுள்ள சிறு தசைகளுக்கு பல மளிக்கிறது. (3) தேகத்திற்கு விரு விருப்பையும் ரத்த புஷ்டியையும் அளிக்கிறது.

## ஐந்து வருஷமாக ஆஸ்துமா இல்லை

சுலபமாக சுவாசிக்க சக்தியளித்து சுகமான நித்திரையையும் உண்டாக்குகிறது. ஆஸ்துமா அண்டாமல் தேகத்தைப் பண்படுத்துகிறது. ஜே. ஆர். என்பவர் எழுதுகிறார்: "ஆஸ்துமாவினால் என் உயிரே போய் எடையிலும் 40 பவுண்டு குறைந்து விட்டது. இழுப்பு, இருமல், மாரடைப்பு தூக்கமே இல்லை. சாவதைத்தான் எதிர்பார்த்தேன். மெண்டாகோ முதல் இரவிலேயே எனக்கிருந்த பிடிப்பை விடுவித்தது. கடந்த இரண்டு வருஷங்களாக ஆஸ்துமாவே இல்லை. மிஸஸ். ஏ. டபிள்யூ. எழுதுகிறார்: "கடந்த 25 வருஷமாக எனக்கு ஆஸ்துமா உண்டு. மெண்டாகோவை உபயோகித்ததிலிருந்து இரவில் நல்ல தூக்கம். பிற்பாடு ஆஸ்துமா உண்டாகவே இல்லை." மிஸஸ். ஜி. ஈ. வி. எழுதுகிறார்: "மெண்டாகோவைப் பற்றிக் கேள்விப்பட்ட நன்னாளை வாழ்த்துகிறேன். கடந்த 35 வருஷங்களாக இராத் தூக்கத்தையே அறியாத என்போன்ற ஏழை ஸ்திரிக்கு ஆண்டவன் அளித்த அமிர்தம் மெண்டாகோவே. தூக்கமின்றி ஆஸ்துமாவினால் உருகிப் போகிறேன். இந்த கஷ்டங்களை யெல்லாம் இப்போது மறந்து விடவேண்டும் என்று உணருகிறேன்."

## கைமேல் காணும் பலன்

மெண்டாகோ முதல் வேளை சாப்பிட்டதுமே ரத்தத்துடன் கலந்து ஆஸ்துமாவை ஒழிக்கிறது. மெண்டாகோ அதிவிரைவில் யௌவன உணர்ச்சி, பலம் இவற்றை அளிக்கிறது. வாபஸ் உத்திரவாதத்தின் கீழ் மெண்டாகோ உபயோகித்துப் பார்த்து தீர்ப்பளியுங்கள். மெண்டாகோ சாப்பிட்ட பின் பூரண குணம் பெறாது, திருப்தியளிக்காவிடில் வெற்றுப் பெட்டியை அனுப்பினால் முழுத் தொகையும் வாபஸ் செய்யப்படும். இன்றே மருந்து வியாபாரியிடமிருந்து மெண்டாகோ வாங்குங்கள். இன்றிரவு எப்படித் தூங்குகிறீர்கள், மறுநாள் காலை எவ்விதமான தெம்புணர்ச்சி ஏற்படுகிறதென்பதையும் பாருங்கள். உத்தரவாதம் உங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கிறது.

**Mendaco**

மெண்டாகோ

★ ஆஸ்துமா ★ மார்ச்சளி நோய் ★ ஹே ஜுரம் இவற்றை நிவர்த்திக்கிறது

# வளரும் குழந்தைகளுக்கு அவசியமானது

# விடோபெரின்

குழந்தைகளுக்கு விடோபெரின் கொடுத்து அவர்கள் வளர்ச்சியடைவதைக் கவனியுங்கள். வளரும் குழந்தைகளுக்கும், நோய் நீங்கி குணம்பெறுவோருக்கும் தேக வளர்ச்சிக்கு அவசியமான பொருள்களெல்லாம் விடோபெரினில் இருக்கின்றன.





தயாரிப்பாளர்கள்
மைசூர் இண்டஸ்ட்ரியல் & டெஸ்டிங் லாபரேடரீஸ் லிட்.,
மல்லேஸ்வரம், பெங்களூர்.

விற்பனை ஏஜண்டுகள்:
**பெஸ்ட் & கம்பெனி லிமிடெட்.**
தபால்பெட்டி நெ. 63, மதராஸ்.

BL25TM

# ப்ரூக் லாக்ஸ்

## சாக்லெட் மலமிளக்கி




ப்ரூக்லாக்ஸ், மலச்சிக்கல் உண்டாகும் குடலினுள் மற்றுமே வேலை செய்து ஒரு தொந்தரவும் இன்றி மலச்சிக்கலை அடியோடு அகற்றுகிறது. ஆதலால் ஜீரண சக்தியை தடை செய்வதில்லை.

2, 8, 24 மாத்திரைகளடங்கிய வாட்டமான சைஸ்களில் கிடைக்கும். பெரிய சைஸ் வாங்குவது மிகவும் சிக்கனமானது.

**ஒரே இரவில் மலச் சிக்கலை அறவே அகற்றுகிறது.**

WL-3-A

# டயபெப்ஸின்




ஆகாரம் சரிவர ஜீரணமாக டயஸ்டாஸ், பெப்ஸின் என்னும் இருவகைப் பொருள்கள் அத்யாவசியமானவை. இவைகள் இரண்டும் உயர்ந்த ரசாயன முறையில் சேர்ந்ததுதான் டயபெப்ஸின். ஆகாரத்துக்குப் பின் ஒரு டீஸ்பூன் டயபெப்ஸின் உட்கொண்டால் ஜீரணச் செயல் தக்ஷணமே ஆரம்பித்து, பாக்கி ஜீரண வேலை வயிற்றுக்கு மிக எளிதாகிறது. உங்கள் ஆகாரத்தின் முழுப் போஷணையும் அடைய இதுவே சிறந்த மார்க்கம்.

**யூனியன் டிரக், கல்கத்தா**

ஏஜண்டுகள்: அப்பா அண்டு கோ., மதராஸ்

மற்றும் எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்

**UNION DRUG. CALCUTTA**

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk, Madras

REGD. No. M. 4392